


| சிலம்பு ௩௨ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௯, பங்குனி ஏப்ரல், 1958 | பரல் ௮ |
|---|---|---|

## கபாலீச்சுரர் கழலிணை சேர்

# ம. பாலசுப்பிரமணிய முதலியார்

சிறப்பு

திரு முதலியாரவர்கள் சிவனடி சேர்ந்த சீர்மையினை நாம் ஓர்தலும் உரைத்தலும் ஒருங்கு பாராட்டுதலும் நம் பெருந்தலைக் கடனாகும். அம் முறையில் அவர்தம் மெய்வரலாற்றின்கண் விடுபட்டுள்ளன சிலவற்றை மீண்டும் நினைவுறுத்த வேண்டிய இன்றியமையாமை நேர்ந்துளது. இவர்தம் விரிவான வரலாறு "மணிவிழாக்கொள் ம. பாலசுப்பிரமணிய முதலியார்" என்னும் தலைப்புடன் நம் செல்வியின் சிலம்பு - ௩௦, பரல் - ௮, பக்கம் - ௩௫௪-இல் அப் பெருந்தகையர் நிழலுருவுடன் வெளிவந்துளது; ஆண்டுக் காண்க.

"தந்தையரொப்பர் மக்கள்" என்பதுபோல் நம் முதலியாரவர்களின் தந்தையார் மயிலை மாசிலாமணி முதலியார் பி. ஏ. அவர்கள். இவர்கள் நாடொறும் பிள்ளையார் வழிபாடும் சிவபூசையும் விதிப்படி விடாது செய்து போந்த மேன்மையர். ஒவ்வொருநாளும் திருக்கபாலீச்சரம் சென்று கள்ளிருள் வழிபாடு கண்டு கும்பிடும் செவ்வியர். பனிமலைதொட்டு இனிய குமரிமுனைவரை யுள்ள சிவப்பதிகளைப் பலமுறை கும்பிடும் பாக்கியம் பெற்றவர். ஆண்டுதோறும் மயிலைப் பங்குனிப் பெருவிழாவிற்கு எங்கிருந்தாலும் மயிலை வந்து தங்கி வழிபடும் தவத்தினர். திருத்தில்லைக்கு இருப்புப்பாதை போடுவதற்கு முன்பே ஏழுநாள் கட்டைவண்டி வாயிலாக வழிநடைகொண்டு திருவாதிரைத் திருநாள் வழிபட்டுயர்ந்த விழுப்பேற்றினர்.

தந்தையாரின் சித்தாந்தப் பயிற்சியும் தலைசிறந்ததொன்றே. தந்தையார் மகாவித்துவான் தணிகாசல முதலியாரவர்களின் மாணவர். இத் தணிகாசல முதலியார் யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலரவர்களிடம் பாடங்கேட்டவர் இவர், சிவதீக்கைப்பேறும், தூய மரக்கறியுணவும், நாடொறும் சிவன்கோவில் வழிபாடும் உள்ளவர்கட்கே சித்தாந்தப்பாடம் போதிக்கும் யாப்புறவினர். அத்தகைய தகுதிவாய்ந்த நம் மாசிலாமணி முதலியாரவர்கட்குச் சித்தாந்தப்பாடம் ஓதுவித்தனர். அவரால் ஓதுவிக்கப்பெற்றவை: சிவஞானபோதச் சிற்றுரை, சிவஞானசித்தியார், சிவப்பிரகாசம், திருவருட்பயன் முதலியனவாகும். இவற்றை நம் பாலசுப்பிரமணிய முதலியாரவர்கள் தம் அருமைத் தந்தையார்பாலே பாடமாகக் கேட்டுப் பயின்றனர் மகாவித்துவான் தணிகாசல முதலியார் வடமொழிப் பயிற்சியுமிக்கவர். அவர், சித்தாந்த சாராவளி, சகலாகமசாரசங்கிரகம், அகோர சிவசாரியார் நூல்கள், அட்டப்பிரகரணம், நீலகண்டபாடியம் முதலியன வல்லார். அச்சுக்கு வராதனவற்றை எழுதியும் கற்றவர். அக் கை எழுத்துப் படிகள் தந்தையார்வாயிலாக, நம் ம. பா. அவர்களுக்குக் கிடைத்ததாகவும் தெரிகிறது. தணிகாசல முதலியாரவர்களின் பிற மாணவர்கள் வித்துவான் சண்முகம் பிள்ளை, திரு. வி. க. விசுவநாத குருக்கள், அரங்கசாமி நாயகர் முதலியோராவர். 1918-இல் இத் தணிகாசல முதலியார் சிவனடி சேர்ந்தனர் என்ப. யாப்புறவு - நியமம்.

தென்றமிழ் மறையின் மந்திரவாற்றல் தேற்றுவன: ம. பா. அவர்களின் தந்தையாரவர்கள் பெங்களூரில் தங்கி அரசியல் அலுவல் மேற்கொண்ட காலத்தில் கொள்ளை (Plague) நோய் வாய்ப்பட்டு மீளார் என்னும் நிலையினை எய்தினர். அக் காலத்து அவரை மாளாது மீளச்செய்த அருண்மறை "அவ் வினைக் கிவ்வினை" என்னும் தமிழ் மறையே. இது முன்பும் விளக்கப்பட்டுள்ளது. இதுபோல் ம. பா. அவர்கள் 1949-ஆம் ஆண்டில் நோயுற்று மூன்று திங்கள்காறும் சென்னைத் தலைமை மருத்துவ நிலையத்தில் தனிமனை யொன்றில் துனியகலத் தங்கியுள்ளனர். தலைசிறந்த மருத்துவர்களும் கைவிட்டனர். அப்பொழுது ஓர் அருமைமிக்க செல்வப் புதல்வியாரால் நாடொறும் சில கிழமைகள் வரை "கந்தர் கலிவெண்பாவும், கந்தரனுபூதியும்" விதிப்படி ஓதப்பெற்றன. அவ் வோதுதலின் பெரும் பயனாக நோயகன்று முதலியாரவர்கள் நன்னலம் பெற்றனர்.

14-3-1958 வெள்ளிக்கிழமை இரவு பன்னிரண்டு நாழிகை யளவில் நம் முதலியாரவர்கள் சிவனடிநீழல் சேர்ந்தனர். அதன் முன்வரை நல்ல நலத்துடனே காணப்பட்டனர். மறைமொழிந்து

மயிலைவாழ் திருக்கபாலீச்சுரக் கடவுளுக்கு மூன்று தலைமுறைதொட்டு விடாது செய்துவரும் வெள்ளியருச்சனையை ம. பா. அவர்களும் விடாது செய்துபோந்தனர் அந் நாளினும் அருச்சனைப் படைப்பும், திருநீறு குங்குமமும், வில்வத் தளிரும் தொண்டர்வாயிலாக இரவு பத்து நாழிகையளவிற் பெற்று அணிந்தும் உட்கொண்டும் இன்புற்றனர். இதனை யடுத்தே அவர்தம் ஆவியும் சிவனடி மேவிற்று. இது சிவத் தொண்டின் பெற்றிதேற்றும் மெய்ம்மையாம் என்க. நம், ம. பா. அவர்களின் தாத்தா முறையாகச் சிவத்திரு. நித்தியானந்த முதலியார் என்னும் பெரியார் ஒருவர் இருந்தனர். அவர்களால் நம் ம. பா. அவர்கள் பலசைவப்பாடங்கள் பயின்றும் நெட்டுருப் பண்ணியும் வந்தனர் நித்தியானந்த முதலியாரவர்களின் நண்பர்கள் ஞானி சோமசுந்தர நாயகர், யாழ்ப்பாணம் கதிரைவேற் பிள்ளை முதலியோராவர். இவர்கள் ஆசிரியர் சோமசுந்தர நாயகர் அவர்களின் வழித் திருஞானசம்பந்தப் பிள்ளையாரை ஆசிரிய அருட்கோலத்தில் ஆக்கியமைத்த படிமத்தை நாடொறும் வழிபட்டு வருவர். இவர்கள் அம் முறையே 1914 ஐப்பசிக் கார்த்திகை நாளில் நண்பகல் வழிபாடு பண்புடன் ஆற்றினர். திருமுறை யோதி எட்டுறுப்பும் நிலத்தே படும்படி வீழ்ந்து ஒரு முறையாக வணங்கினர். வணங்கியவாறே மாரடைப் பினால் ஆவி பிரிந்து சிவனடிநீழலில் இணங்கினர். அவர்தம் உடல் எழாதாயிற்று. இதுபோன்றே ம. பா. அவர்களும் கபாலீச் சுரர் நினைவுடனே அவர்தம் கழலிணை சேர்ந்தார் என்பது ஒப்பு நோக்கி நினைவுகூரற் பாலது.

ம. பா. அவர்களின் திருவடிச்சேர்வு செய்தித்தாள்கள் வழியாகவும், தொலைபன்னி வாயிலாகவும், ஆட்கள் வாயிலாகவும் சென்னைக்கோநகர் எங்கணும் கதுமெனப் பரவிற்று. வெளியூர் கட்கு மின்னஞ்சல் வாயிலாகச் செய்தி விரைந்து எட்டியது.

மறுநாள் 15-3-1958 சனிக்கிழமை பிற்பகல் இருபது நாழிகைக்கு இறுதிச்சடங்கு சைவக் குருக்கண்மாரால் சிவாகம முறைப்படி துவங்கப்பெற்றுச் சிறப்பாக நடந்தேறியது. சடங்கின் கருத்தாவாகத் தொன்மைவளஞ்சேர் நன்மைமிகு மணலிப் புரவலரும் மாறிலா வள்ளலும், பேரற முதல்வரும், ம. பா. அவர்களின் மருகரும், நற்பண்பினரும் ஆகிய மணலி திரு. இராமகிருட்டிண முதலியார் பி.ஏ. அவர்கள் ஆற்றினர். ம. பா. அவர்கள் திருமேனிக்குத் திருமுழுக்கு முதலிய சிறப்புகள் அனைத்தும் முறைமுறையே செவ்வையாக நிகழ்த்தப் பெற்றன. திருக்கோவிலினின்றும் வந்த திருவெண்ணீறு திரு மாலை முதலியன அணியப்பெற்றன. உள்ளூர் வெளியூர் நண்பர்

களும், செல்வர்களும், புரவலர்களும், புலவர்களும், பெரும் பேராசிரியர்களும், பல்வேறு கழகத்தினர்களும், பலதுறை அலு வலர்களும், பெருமக்களும் அளவிறப்பக் குழுமினர். அகமும், புறமும், தெருவும் இடங்கொள்ளாதிருந்தன.

ஈமத்துறை சென்று சேர இரவு ஐந்து நாழிகைக்கு மேலாயிற்று. ஆங்கும் குடமுடைத்தல் கொள்ளிவைத்தல் முதலிய சில சடங்குகள் நிகழ்ந்தன. அறிஞர் பலர் இரங்க லுரை வெளியிட முன்னுறச் செறிந்தனர். எனினும் காலமிகுதி நோக்கித் திருத் தருமபுர ஆதீனச் சார்பாக அவ் வாதீன மேலாளரும், ஏனையோர் சார்பாகத் திரு. சைவப்பாதிரியார் சச்சிதானந்தம் பிள்ளை பி. ஏ., எல். டி. அவர்களும் உருக்க மாகச் சில மொழியால் பல பொருள்விளங்கக் கையறுநிலை புகன்றனர்.

நன்மைக்கிருத்தும் நற்செயல் ம. பா. அவர்களின் "திருவரு ளகம்" என்னும் வளமனையில் 29-3-'58 மாலை ஐந்து மணிக்கு நிகழ்ந்தது. பெருந்திரளாகப் பெருமக்கள் குழுமியிருந்தனர். தலைக்கட்டு முதலிய தனிச்சிறப்புகள் நிகழ்ந்தன. திரு. சச்சி தானந்தம் பிள்ளை முதலியோர் பேசினர். சமாசச் சார்பாகவும் வாலாசபாத் இந்துமத பாடசாலைச் சார்பாகவும், சண்முகானந்த சபைச் சார்பாகவும், திருவாலங்காட்டுச் சித்தாந்த சைவ அந் தணப் பெரியார் சார்பாகவும் கையறுநிலைகள் படித்தளிக்கப் பெற்றன. அப்படிகள் அனைவர்கட்கும் வழங்கப்பெற்றன. இரவு பத்துநாழிகை வரை திருமுறை அரங்கு துணைக்கருவிகளுடன் மிக இனிமையாக நிகழ்ந்தது.

6-4-'58-இல் நம் ம. பா. அவர்கள் கல்வி பயின்றதும் நல் லாசிரியன்மாரால் பாராட்டப்பெற்றதும் ஆகிய மயிலை, (P. S. High School) மண்டபத்தில் கையறுநிலைப் பொதுக்கூட்டமும் பலரால் யாக்கப்பெற்ற கையறுநிலைக் கட்டுரைகளும் பேரறிஞர் பலரின் சொற்பொழிவுகளும் நிகழ்ந்தன. அவை, சித்திரைச் 'சித்தாந்த'மாக மலர்ந்தன.

நம் ம. பா. அவர்கள் செந்தமிழ் மொழிக்கும், சித்தாந்த சைவத்திற்கும், திருமால் நெறிக்கும் ஒல்லும்வகை யோவாது செய்த போந்த பல்வகைத் தொண்டுகளும் அளப்பில. தம் அறுபத்திரண்டாம் அகவையில் ஐயனடி நீழலெய்தினர். அவ்வா ருயிர் இன்புறுமாக அவர்தம் அருங்குடும்பத்தார்க்கு எம்பரிவும் ஆறுதலும் உரியவாகுக.

---

# சிலப்பதிகாரம் (கானல்வரி)

## (மாதவி பாடிய ஆற்றுவரிப்பாடல்)

[பண்டித வித்துவான், திரு. தி. சங்குப் புலவர்]

(செல்வி, சிலம்பு-கூ௨, பரல்-கூ, ௨அ0 ஆம் பக்கத் தொடர்ச்சி)

அத்தகைய சிறப்புடையது எமது ஊராகிய காவிரிப்பூம் பட்டினம் என்று கூறி மறுத்தாள் பாங்கி. கவியைக் காண்க.

"தீங்கதிர் வாண்முகத்தாள் செவ்வாய் மணிமுறுவ லொவ்வா வேனும்
வாங்குநீர் முத்தென்று வைகலு மான்மகன்போல் வருதிரைய
வீங்கோதந் தந்து விளங்கொளிய வெண்முத்தம் விரைசூழ் கானற்
பூங்கோதை கொண்டு விலைஞர்போன் மீளும் புகாரே யெம்மூர். (க)

(௨) வரைவுகடாதல் என்பது, பாங்கி தலைவனை நோக்கித் "தலைவியை மணம் புரிந்துகொள்" என்று கூறுதலாம். பாங்கியை வாயிலாகக் கொண்டு தலைவன் பகற் குறியில் வந்து தலைவியைக் கூடி இன்பம் நுகர்ந்தான். பின்னர் இரவுக் குறியினும் சின்னாள் வந்து இன்பம் நுகர்ந்தான். இரவுக் குறியிடையீடு நேர்ந்தது. தலைவனைத் தலைவி காண்பது அருமையாயிற்று. பிரிவாற்றாமையாற் பெரிது வருந்தினாள் தலைவி. நோயும் பசலையும் புறத்தார்க்குப் புலனாகிப் பழிச்சொற் கூறினர். அவ்வூர் முழுவதும் பழிச்சொற் பரந்தது ஆருயிர்ப் பாங்கி அறிந்தாள் அதனை. தலைவனைக் கண்டு நீ வரைந்துகொள் என வேண்டினள். பின்னர் வந்து வரைந்து கொள்வேன் என்று கூறிக் காலம் நீட்டித்தான். ஒருநாள் தலைவன் வந்து நிற்கக் கண்டாள். இடித்துக் கூற எண்ணினாள். தலைவனை முன்னிலையாக்கித் தம்மைத்தாமே நொந்து கொள்வதுபோலக் கூறி அறிவுறுத்துகின்றாள். ஐய! நாங்கள் அறியாமையுடையோம். இவ்வாறு பின் நிகழும் என்பதை நாங்கள் எவ்வாறு முன்னரே அறிந்துகொள்ள இயலும். வலிய பரதவர் வாழும் சேரியில் இருக்கும் மடவார் நாங்கள். களவிற் புணர்ந்த கன்னியரைக் காதலர் பிரிந்து மணம் புரிந்து கொள்ளாமற் காலம் கடத்துவார் என்பதையும், அவர் பிரிவு காரணமாகத் தலைவி யுடல் மெலிந்து பிரிவாற்றாமையால் வருந்துவள் என்பதையும், தலைவியின் செங்கையில் வளையல்கள் கழன்று விழ உடல் மெலிந்து ஊரார் அறியப் பழிச்சொல் உண்டாகும் என்பதையும் அக்காலத்தில் உணர்ந்தோமா? உணர்ந்திருந்தால் இவ்வாறு களவிற் புணர்ந்து எம் தலைவி வருந்த நானும் வருந்தி மணமுடித்துக் கொள்ளும்படி நும்மைப்

பன்முறையும் வேண்டி நிற்பேமா? அறியாமையால் விளைந்த கேடு இது. எம்முடைய ஊராகிய காவிரிப்பூம்பட்டினத்தின் இயற்கையும் அதுதான். பூஞ்சோலையிற் புன்னைமரம் அரும்பிப் பூத்திருக்கும். அப் புன்னைமரப் பூங்கொம்பில் அன்னப்பறவை யேறி யமர்ந்திருக்கும். பூஞ்சோலை பசுமை நிறத்தால் இருள் போலத் தோன்றும். புன்னை மலர் விண்மீன்கள்போலத் தோன்றும். அன்னப் பறவை வெண்ணிலாப்போலத் தோன்றும். அங்குள்ள வண்டுகள் இக் காட்சியைக் கண்டு இராக்காலம் வந்தது; விண்மீன்கள் விளங்கின; வெண்மதி யெழுந்தது: என்று மருண்டு அல்லி மலர் விரியும் காலம் என்று பொய் கைக்குச் சென்று அப் பூக்களில் வாய்வைத்து ஊதும் இத்தகைய இயற்கை வளம் காணலாம் எம்மூரில். வண்டுகள் அறியாது மயங்கியதுபோலவே நாமும் உண்மைக் காதலர் என நினைத்து மயங்கினோம். அதனால் இவ்வாறு வருந்துகிறோம் என்று கூறினள்.

(௩) பின்னும் பாங்கி, தலைவனை நோக்கி ஐய! கள்ளானது உண்டவரை மயக்கி அவரது உணர்வைக் கெடுக்கும். அவ்வாறு அறிவை மயக்கும் கள்ளையுண்ட பழக்கத்தால் இடைவிடாது குடிக்கும் இயற்கையுடையது எமது பரதவர் சேரி. அச்சேரியிற் பிறந்த செல்வ மங்கையர் நாங்கள். ஆதலால் மிகவும் அறியாமை யுடையோம் என்பது சொல்லாமலே விளங்கும். மருந்தினல் நீக்கமுடியாத கொடுங் காமநோயை நீர் எங்கட்குத் தந்து பிரிந்து விடுவீர் என்பதை அக்காலத்தில் அறிந்தோமா? அறிந்திலேம். எமது புகார் நகரத்து இயற்கை ஒன்று புகல்கின்றேன் கேளுங் கள்; அது மிகவும் வியப்பாய செயல். கடற்கரையிற் சில சிறிய பெண்கள் சென்று மணல்வீடு கட்டி விளையாடுவார்கள். அப்போது கடலில் இருந்து பேரலை ஒவ்வொன்று வரும். அவ் வலை வந்து மோதித் திரும்பும்போது மணல்வீட்டை யரித்துக் கெடுத்துவிடும். அதைக் கண்ட அச் சிறுமியர் சந்திரன்போன்ற முகத்திலுள்ள நீண்ட வேல்போன்ற கண்களிற் கண்ணீரை நிறைய வடித்து வருந்தி அழுவார். பின்பு கடலை நோக்கி ஓ கடலே! நீ கெட்டுப்போ! தூர்ந்துபோ! தொலைந்துபோ! எங்கள் மணல்வீட்டைக் கெடுத்தாயே! நீ விளங்குவையா? துலங்குவையோ? என்று புலம்பி இரண்டு கைகளாலும் மணலை வாரிவாரி யிறைத்துத் தூர்த்துவிட வேண்டும் என்ற நோக்கத் தோடு நிற்பார்கள். இவ்வளவு அறியாமையுடைய இளங் கன்னியர் வாழ்வது எமது காவிரிப்பூம்பட்டினம் என்றாள். அவ்வூரிற் பிறந்த எங்கட்கு என்ன அறிவுதோன்றும் என்பது குறிப்பு. கவி யிரண்டும் பாடிக் காண்க.

மறையின் மணந்தாரை வன்பரதர் பாக்கத்து மடவார் செங்கை
யிறைவளைக ளூற்றுவதை யேழைய மெங்ஙனம்யாங் கறிகோ மைய
நிறைமதியு மீனு மெனவன்ன நீள்புன்னை யரும்பிப் பூத்த
பொறைமலிபூங் கொம்பேற வண்டாம்ப லூதும் புகாரே யெம்மூர். (உ)

உண்டாரை வென்னறா வுணவுளியாப் பாக்கத்துளுறையொன் றின்றித்
தண்டாநோய் மாதர் தலைத்தருதி யென்பதையாங் கறிகோ மைய
வண்டா றிரையலைப்பக் கையான் மணன்முகந்து மதிமே னீண்ட
புண்டோய்வே னீர்மல்க மாதர் கடறூர்க்கும் புகாரே யெம்மூர். (௩)

திணை நிலைவரிப் பாடலின் பொருள் விளக்கம்

மாதவி திணைநிலை வரி என்ற பாடல் பாடினள். நெய்தல் என்ற திணையும், அந்நிலக் கருப்பொருளும் நிலைபெறப் பாடிய இசைப் பாட்டு. ஆதலால் இவை இப்பெயர்பெற்றன போலும். இவற்றில் முதற் கவி "வலிதாகச் சொல்லிக் குறைநயப்பித்தல்" என்ற துறையமைந்தது. பின்னின்ற கவிகள் ஐந்தும் "காமமிக்க கழிபடர்கிளவி" யென்னுந் துறையமைந்தவை.

துறை விளக்கம்

வலிதாகச் சொல்லிக் குறைநயப்பித்தல் என்பது தலைவன், கண்ணியும் தழையும் கையுறையாகக் கொண்டுவந்து பாங்கியிடந் தந்து பலநாளும் தன் குறை கூறினன்; அதனையறிந்த தோழி தலைவிக்கு முதலில் மெலிதாகச்சொல்லி யுடன்படுமாறு வேண்டினள். தலைவி தலைவனை யறியாதவள்போலப் பாங்கி கூறுவதைச் செவியேற்காமற் கையுறையை வாங்காது காலங் கடத்தினள்; பின்னர்ப் பாங்கி தலைவியை நோக்கி "அவன் உன் காதலாற் பலகாலமும் வந்து வருந்துகின்றான்; அவனது குறையை முடிக்கவேண்டும்; இல்லையெனில் மடலேறுவான்; மலையேறி வீழ்ந்து உயிர் நீங்கினும் நீங்குவான்; பழி நமக்கே வந்துசேரும்; இத்தகைய வீண்பழியும் பாவமும் நம்மைச் சேராமல் அவனோடு கூடிக் கலந்து வாழவேண்டும் என வற்புறுத்தினள் என்பது.

பொருள் விளக்கம்

(க) பாங்கி தலைவியை நோக்கிக் கூறுகின்றாள். வளைந்து சுருண்டு வளர்ந்திருக்கும் கூந்தலை யுடையவளே! நின்னைக் காதலித்துப் பல நாளும் வந்து அலையும் தலைவன் நேற்றும் வந்தான். அழகிய பூங்கொத்துக்கள் நெருங்கியிருக்கும் கானற் கழிக் கரையில் என்னுடன் உரையாடி நின்றான். அங்கே புள்ளிகள் பொருந்திய நண்டுகள் ஆணும் பெண்ணுமாகப் புணர்ந்து விளையாடக் கண்டான். அவற்றைக் கண்டவுடனே என்னையும் குறிப்பாகப் பார்த்தான். அறிவுகெட்டு மயங்கினான். அம்

மயக்கத்துடன் உரையாடலை நிறுத்தி விரைவாகச் சென்றான். சென்ற தலைவன் இன்னும் வந்திலன். அவன் மடலேறத் துணிந்து சென்றானோ? மலையேறி வீழ்ந்து உயிர்துறக்கத் துணிந்தானோ? அவனது குறிப்பை யான் அறிந்திலேன். நீ இனிமேலாவது எனக்காக அவன் குறையை முடிக்கவேண்டும் என்றாள். பாடல் காண்க.

புணர்துணையோ டாடும் பொறியலவ னோக்கி
யிணர்ததை பூங்கான லென்னையு நோக்கி
யுணர்வொழியப் போன வொலிதிரை நீர்ச்சேர்ப்பன்
வணர்சுரி யைம்பாலாய் வண்ண முணரேனால்.

துறை விளக்கம்

“காமமிக்க கழிபடர் கிளவி” யென்பது, தலைவன் தலைவியைப் பிரிந்து காலம் நீட்டித்தபோது, பிரிவாற்றாமையால் வருந்திய தலைவி, நெய்தல் நிலத்துக் கருப்பொருள்களாகிய கழிக்கரையிலுள்ள பல பொருள்களை நோக்கிக் கேளாதவற்றைக் கேட்பன போலவும், சொல்லாதவற்றைச் சொல்வன போலவுங் கூறி மயக்கத்தாற் புலம்புவது.

பொருள் விளக்கம்

(உ) தலைவன் தலைவியிடம் கூறாமலே வரைவுக்குரிய பொருள் ஈட்டக் கருதிப் பிரிந்தான். விரைவில் வந்து தன்னை வரைந்துகொள்வான் எனக் கருதினள் தலைவி. பொருள் ஈட்டு முயற்சியானது காலம் நீட்டித்தது. பிரிவாற்றாமையாற் காமமிகுந்து கலங்கினள் தலைவி. நம்மை மறந்தான்போலும் என்று மயங்கினாள். கழிக்கரைக் கானலிற் கண்ட மரங்களையும் பறவைகளையும் அழைத்துப் புலம்புகின்றாள். அழகிய மெல்லிய பூங்கொத்துக்களைத் தாங்கிய அடம்பு மரங்களே! அன்னப் பறவைகளே! என்னைக் காதலுடன் புணர்ந்த தலைவர் மறந்தனர் போலும்! அவரது குளிர்ந்த கருணையும் என்னை மறந்ததோ? அவருடைய குதிரைகள் பூட்டிய தேரும் இங்கு வர மறந்ததே! முதலில் களவிற் கூடி மகிழ்ந்த இடம் அடம்பு மரநிழல் அல்லவா? அன்னப்பறவைகளும் இருந்தனவே! அடம்பு மரமும் அன்னப்பறவையும் ஆகிய நீங்கள்தாமே சான்றாக இங்கு இருந்தீர்கள். வேறு யாருக்குத் தெரியும்? ஒரு நாளேனும் இடைவிட்டு வந்ததுண்டோ! இல்லையே! அங்ஙனம் என்னை மறவாமல் ஒவ்வொரு நாளும் வந்து புணர்ந்துசென்ற காதலர் கருணையும், அவரது தேரும் என் கண்களைவிட்டு நீங்காமல் இருக்கின்றனவே! எப்படி மறப்பேன். நம்மை மறந்தாரை நாம் மறந்துவிடுவதுதான் முறை என்று தெரிந்தேன்.

தெரிந்தாலும் மறக்க முடியவில்லையே! என்ன செய்வேன். இவ்வாறு நிகழும் எனக் கனவிலாவது நான் நினைந்ததுண்டா? காதலரைக் காணாது நாட்கள் பல பயனின்றிக் கழிகின்றனவே! என் வருத்தம் தீர்வதற்குத் தகுந்த வழியையாவது ஆய்ந்து கூறுங்கள் என்று புலம்பினாள்.

(௩) இனிமையான கள்ளுடன் பொருந்திய வாயையுடைய நெய்தற் கொடியே! நீ என் கண்களைப் போலவே பூ மலர்ந்திருக்கின்றாய். ஆயினும் என் கண்களைப்போலத் துன்பம் அடைந்து வருந்துகின்றாயா? இல்லையே! பிரிந்தார்க்குத் துன்பத்தைக் கொடுக்கின்ற மாலைப் பொழுது வந்ததே! நான் புலம்புகின்றேனே! என் கண்கள் நீரை வடித்துத் துயிலாது சோர்கின்றனவே! நீயோ அவ்வாறு கவலையின்றிக் கண்மூடி யுறங்குகின்றாயே! இது அன்புடையார் செயலாகுமா? அது தான் நிற்க. கண்மூடி யுறங்கும்போது கனவு காண்பது இயற்கைதானே! நானும் கண்ணுறங்கியபோது என் காதலர் வரவு கண்டுகொள்வேன். நீதான் இப்போது உறங்குகின்றாயே! என்னைப் பிரிந்த வன்கண்மையுடைய காதலர் உன் கனவில் வரக் கண்டறிந்தனையோ? காண்கிலையோ? நான் அறியேன். அவரைக் கண்டால் என் வருத்தத்தை அவர்க்கு எடுத்துக்கூறி அழைத்து வருவாய். அதுவே நீ எனக்குச் செய்யும் பேருதவியாகும் என்று புலம்பினாள்.

(௪) தெளிவாகிய கடலில் வரும் அலையே! "நீ எனக்குக் கொடுமை செய்தனையே. எனது காதலர் என்னைப் பிரிந்தார்! அவரது பிரிவாற்றாமையால் வருந்துகின்றேன் நான். அவ்வாறு வருந்துகின்ற எனக்கு அவருடைய தேர் வந்து சென்ற வழி சிறிது துன்பத்தைத் தணித்தது. அவ்வழியைப் பார்த்துப் பார்த்து என் மனம் ஆறுதலடைந்து சிறிது காமநோய் நீங்கி மகிழ்ந்திருந்தேன். அந்த மகிழ்ச்சியையும் நீ கெடுத்தனையே! பறவை பறப்பதுபோல விரைவிற் செல்லும் குதிரைகள் பூட்டிய என் காதலர் தேர்ச் சக்கரம் பதிந்த சுவடுகள் எல்லாம் தெரியாதபடி சிதைத்துவிட்டாயே! இவ்வாறுதான் அன்புடையவர் செய்வாரோ? அன்பு சிறிதுமில்லாதவர் செயலன்றோ இது. இங்கு எங்களோடு கூடியிருந்து பழி தூற்றும் அயலார்களைப் போல நீயும் எமக்குப் பகையாகவே யிருக்கின்றாய்போலும். எனது துன்பத்தை நீ யறியாமல் நீ இவ்வாறு கெடுத்தனையே! இனி நான் என்ன செய்வேன் என்ன செய்வேன்; என்று புலம்பினாள்.

(௫) எம்மைக் கூடிக்கலந்த காதலரது நீண்ட தேர்ச் சக்கரம் பதிந்த வழிகள் எல்லாம் கெடும்படி வந்துமோதிய கடல்

அலேயே! பூக்கள் மலர்ந்து குளிர்ச்சியைத் தரும் பூஞ்சோலேயே! பெடையும் சேவலும் ஒன்ருெடொன்று கூடிப் புணர்ந்து விளேயாடுகின்ற அன்னப்பறவைகளே! மிகவும் குளிர்ந்த நீர்த் துறைகளே! என் பிரிவாற்ருமைத் துன்பத்தைக் கண்டும் சும்மா இருக்கின்றீர்களே! எம்மை விட்டுப் பிரிந்த காதலரைக் கண்டு என் துன்பத்தைக் கூறமாட்டீர்களா? நெடுநாளாக நீ உன் காதலியைப் பிரிந்து மறந்திருப்பது தகாத செயல் என்று இடித்துரைப்பீர். அவ்வாறு இடித்துரைத்து எம்பால் வரும்படி எமது காதலர்க்கு அறிவுரை கூறி வரச் செய்தால் அதுவே பேருதவியாம் எனக்கு; என்று புலம்பினுள்.

(௬) கடலில் இருந்து அடிக்கடி வந்துமோதும் பேரலேயே! எம்மைக் கலந்த காதலர் ஏறிவந்த நீண்ட தேர்ச் சக்கரத்தின் சுவடுபட்ட வழியெல்லாஞ் சிதைத்து விட்டனேயே! நீ வாழ்வாயாக. எம்மோடு நட்பு நீங்கிய பகையாளியைப்போல எம்மை விட்டு நீங்கிச் செல்கின்ருயா? இல்லேயே! எம் பக்கத்திலேயிருந்து உட்பகை வைத்து எம்மைக் கெடுப்பதுபோலத் தோன்றுகிறது உன் செயல். என் பிரிவாற்ருமைத் துயரத்தை நீக்குவதற்கு வழியறியாமல் நான் மயங்குகிறேன்; என்று புலம்பினள். ஐந்து பாடல்களேயும் அடியிற் காண்க.

"தம்முடைய தண்ணளியுந் தாமுந்தம் மான்றேரு
மெம்மை நினேயாது விட்டனரேல் விட்டகல்க
வம்மெ னிணர வடும்புகா ளன்னங்கா
ணம்மை மறந்தாரை நாமறக்க மாட்டேமால். (உ)

புன்கண்கூர் மாலேப் புலம்புமென் கண்ணேபோற்
றுன்ப முழவாய் துயிலப் பெறுதியா
லின்கள்வாய் நெய்தானீ யெய்துங் கனவினுள்
வன்கணர் கானல் வரக்கண் டறிதியோ. (௩)

புள்ளியன்மான் றேராழி போன வழியெல்லாந்
தெள்ளுநீ ரோதஞ் சிதைத்தாய்மற் றென்செய்கோ
தெள்ளுநீ ரோதஞ் சிதைத்தாய்மற் றெம்மோடீங்
குள்ளாரோ டுள்ளா யுணராய்மற் றென்செய்கோ. (௪)

நேர்ந்தநங் காதலர் நேமி நெடுந்திண்டே
ரூர்ந்த வழிசிதைய வூர்கின்ற வோதமே
பூந்தண் பொழிலே புணர்ந்தாடு மன்னமே
யீர்ந்தண் டுறையே யிதுதகா தென்னீரே. (௫)

நேர்ந்தநங் காதலர் நேமி நெடுந்திண்டே
ரூர்ந்த வழிசிதைய வூர்ந்தாய்வாழி கடலோத
மூர்ந்த வழிசிதைய வூர்ந்தாய்மற் றெம்மொடு
தீர்ந்தாய்போற் றீர்ந்திலேயால் வாழி கடலோதம்." (௬)

*மயங்குதிணை நிலை வரி (பொருள் விளக்கம்)*

மயங்குதிணைநிலை வரிப்பாடல்கள் ஆறு. அவற்றின் முன்னின்ற மூன்றும் "அல ரறிவுறீஇ வரைவு கடாதல்" என்னுந் துறையமைந்தவை. பின்னின்ற மூன்றும் "தலைவி மாலையம் பொழுது கண்டிரங்கல்" என்னுந் துறையமைந்தவை.

"அலரறிவுறீஇ வரைவுகடாதல்" என்பது, தலைவியைக் களவிற் புணர்ந்து வந்த தலைவனை நோக்கி பாங்கி, "நீ இங்கு வருவதும் போவதும் எமது ஊரார் அறிந்து பழிச்சொல் ஊர் முழுவதும் பரவியது; இனி நீ களவொழுக்கம் நீட்டித் திருப்ப நினைப்பது தவறு; விரைவில் மணந்துகொள்ள வேண்டும்; உன் கருத்து யாது? என வினவுதல் ஆம்.

(1) பாங்கி தலைவனை நோக்கிக் கூறுகின்றாள். கடலில் இருந்துவரும் அலைகள் நல்ல முத்துக்கள் என்னும் நகைகளைப் பூண்டு நன்மை பொருந்திய பவளக்கொடிகள் ஆகிய ஆடையையுடுத்து மணப்பெண் போலச் சென்று செந்நெல் விளையும் வயல்கள் தோறும் உலாவி வருகின்ற வளம்பொருந்திய கடற்கரைத் தலைவனே! இந்தப் புன்னை மரங்கள் நிறைந்த பூஞ் சோலையில் வலிய மீன்கொடி யுடைய மன்மதன் எமது தலைவிக்கும் நினக்கும் மலரம்பு தொடுத்துக் காம மயக்கத்தை யுண்டாக்கினான். இருவரும் கலந்து இன்பம் நுகர்ந்தீர். மன்மதன் நின்மேல் மலர்ப்பாணம் தொடுக்க மறந்தான்போலும். பட்ட புண் பழம்புண்ணாய் ஆறிவிட்டதுபோலும். தலைவியை மறந்து சிறிதும் மயக்கமின்றித் திரிகின்றாய். அவள் உன்னை மறவாது பிரிவாற்றாமையாற் பெரிதும் வருந்துகின்றாள். மேன்மேலும் காமன் விடுத்த பூங்கணை பட்டுப் புதுப்புண் பெற்றாள்போலத் தோன்றுகின்றாள். அப் பிரிவாற்றாமைத் துன்பத்தை உயிர் போன்ற எனக்கும் தெரியாமல் மறைத்து ஒழுகுகின்றாள். அவள் தாய் அறிந்தால் நான் என்ன செய்வேன். எவ்வாறு உங்கள் களவொழுக்கத்தைக் கூறுவேன். நீ விரைவில் மணம் புரிந்து வாழ்வதுதான் நலம் என்று கூறினள்.

(2) கடலில் இருந்து வரும் அலைகள், வெண்மையான முத்துக்களை வாரிக்கொண்டு வருவது பல்லைக்காட்டிச் சிரிப்பது போலத் தோன்றும். வளம்பொருந்திய சிவந்த பவளக்கொடியை யிழுத்துக்கொண்டு வருவது வாயைத் திறந்து பேசிவருவது போலத் தோன்றும். இவ்வாறு சிரிப்பது போலவும் பேசுவது போலவும் அலைகள் பரதவர்சேரியில் வலைகளை உலர்த்தியிருக்கும் முற்றத்தில் உலாவித் திரியும். இத்தகைய சிறப்புடைய நெய்தல் நிலத் தலைவனே! மழைபெய்ய மலர்ந்த பீர்க்கம் பூவின் நிறம்

போலப் பசலை நோயடைந்து எமது தலைவி வாடுகின்றாள். இனி அன்னை தெய்வத்தை நினைத்து வேலனை யழைத்து வெறியாட்டு நிகழ்த்தி "இவளுக்கு இக்கொடுமை செய்தவர் யார்?" என வேலனை வினவித் தெரிந்துகொண்டால் நான் என்ன செய்வேன்? எனக்குத்தானே பழிவந்து சாரும். ஆதலால் விரைவில் மண முடித்துக்கொள் என்றாள் பாங்கி.

(3) "கடலில் இருந்துவரும் அலைகள் தம்மேல் மீன் புலால் நாற்றம் உள்ளது என்று வருந்தும்; அப்புலால் நாற்றத்தை மாற்றுவதற்குப் பூஞ்சோலையிற் புகுந்து ஆங்கே உதிர்ந்துகிடக்கும் பலவகையான பழம் பூக்களோடு கலந்து திரும்பும்; திரும்பிவரும் போது புலவு மணம் நீங்கிக் கலவைப் பூமணம் கமழும்படிவரும்" என்று கண்டோர் கற்பனை செய்து கூறும்வண்ணம் இயற்கை வளம் பொருந்திய நெய்தல் நிலத் தலைவனே! எம் தலைவி பிரிவாற்றாமையால் மெலிந்து பசலையடைந்து வருந்துகின்றாள். பலவகையான நோயடைந்திருப்பதால் இன்னநோய் என்று எவராலும் துணிந்து கூற இயலவில்லை அத்தகைய காம நோயைக் கண்டு தாய் வருந்துகின்றாள். இன்னதென அறியமுயல்கின்றாள், இனி கட்டும், கழங்கும், வெறியாடலும் ஆகிய செயல்களால் அன்னையறிந்துகொள்வாள் என அஞ்சுகின்றேன். அறிந்தால் நான் என்ன செய்வேன்? செய்யும் வழியறியாது திகைக்கின்றேன். நீ மணம்புரிந்து கொண்டால் என் மனத்துயர் மாறும் என்றாள் பாங்கி: பாக்கள் மூன்றும் படித்துக் காண்க.

மயங்குதிணை நிலை வரிப்பாடல்கள் மூன்று

"நன்னித் திலத்தின் பூணணிந்து நலஞ்சார் பவளக் கலையுடுத்துச்
செந்நெற் பழனக் கழனிதொறுந் திரையு லாவு கடற்சேர்ப்ப
புன்னைப் பொதும்பர் மகரத்திண் கொடியோ னெய்த புதுப்புண்க
ளென்னைக் காணு வகைமறைத்தா லன்னைகாணி னென்செய்கோ." (௧)

"வாரித் தரள நகைசெய்து வண்செம் பவள வாய்மலர்ந்து
சேரிப் பரதர் வலைமுன்றிற் றிரையு லாவு கடற்சேர்ப்ப
மாரிப் பீரத் தலர்வண்ண மடவாள் கொள்ளக் கடவுள்வரைந்
தாரிக் கொடுமை செய்தாரென் றன்னை யறியி னென்செய்கோ." ()

"புலவுற் றிரங்கி யதுநீங்கப் பொழிற்றண் டலையிற் புகுந்துதிர்ந்த
கலவைச் செம்மன் மணங்கமழத் திரையு லாவு கடற்சேர்ப்ப
பலவுற் றொருநோய் துணியாத படர்நோய் மடவா டனியுழப்ப
வலவுற் றிரங்கி யறியாநோ யன்னை யறியி னென்செய்கோ." (௩)

தலைவி மாலையம்பொழுதுகண் டிரங்கல் என்பது, தலைவன் பிரிவாற்றாமையால் வருந்தும் தலைவி மாலைப்பொழுது வரக்கண்டு காம மிகுதியாற் பாங்கியிடம் கூறிப் புலம்புவது.

(4, 5, 6.) தலைவி பாங்கியை நோக்கி "இதழ்விரிந்த பூப் புனைந்த கூந்தலுடையாய்! புதிய நிறை நிலாவைப் போன்ற வட்டமான ஒளி பொருந்திய முகத்தையுடையாய்! சூரியன் மறைந்துவிட்டானே! நெருங்கிய இருள் பரந்ததே. என் கண்கள் நீங்காத வருத்தத்தால் நீரைச் சொரிகின்றனவே! என் கைவளையல்கள் கழன்று விழுகின்றனவே! தீயைக் கக்கியது போன்ற வெப்பத்தைக் கொடுக்கும் மாலைக்காலம் வந்ததே! யாவரும் மயங்கும் மாலைக்காலம் வந்ததே! நான் என்ன செய் வேன். நம்மை விட்டுப் பிரிந்த தலைவர் வாழும் நாட்டிலும் இது போன்ற மாலைக்காலம் இருக்கின்றதோ? இல்லையோ? சூரியனை விழுங்கிவிட்டதே இந்த மாலை! சந்திரனை உமிழ்ந்து விட்டதே இம் மாலை! என் உயிர்மேற் படையெடுத்து வந்ததுபோல் வீர முடன் வந்து வருத்துகின்றதே! பறவைகள் எல்லாம் தமது படுக்கையிடத்திற் சென்று படுத்து ஒலியின்றி உறங்குகின்ற னவே! இவ்வாறு என்னை வருத்தும் மாலைக்காலம் அவர் நாட்டி லும் இருந்தால் என்னை மறந்து இருப்பாரோ இதுவரையிலும். என்னைப்போலப் பிரிவாற்றாமையால் அவரும் வருந்துவாரே! அவர் நாட்டில் இம் மாலைக்காலம் இல்லை எனக் கருதுகின்றேன் நீ ஆராய்ந்து சொல் தோழி! என்றாள்.

மயங்குதிணை நிலை வரிப்பாடல் பின்னின்ற மூன்று பாடல்கள் காண்க.

"இளையிருள் பரந்ததுவே யெற்செயவான் மறைந்தனனே
களைவரும் புலம்புநீர் கண்பொழீஇ யுகுத்தனவே
தளையவிழ் மலர்க்குழலாய் தணந்தார்நாட் டுளதாங்கொல்
வளைநெகிழ வெரிசிந்தி வந்தவிம் மருண்மாலை." (௪)

"கதிரவன் மறைந்தனனே காரிருள் பரந்ததுவே
யெதிர்மலர் புரையுண்க ணெவ்வநீ ருகுத்தனவே
புதுமதி புரைமுகத்தாய் போனார்நாட் டுளதாங்கொன்
மதியுமிழ்ந்து கதிர்விழுங்கி வந்தவிம் மருண்மாலை." (௫)

"பறவைபாட் டடங்கினவே பகல்செய்வான் மறைந்தனனே
நிறைநிலா நோய்கூர நெடுங்கணீ ருகுத்தனவே
துறுமல ரவிழ்குழலாய் துறந்தார்நாட் டுளதாங்கொன்
மறவையா யென்னுயிர்மேல் வந்தவிம் மருண்மாலை." (௬)

"சாயல் வரி" என மூன்று பாடல் உள்ளன. அவை மூன்றிலும் "மெலிதாகச் சொல்லிக் குறைநயப்பித்தல் என்ற துறை" அமைந்திருக்கிறது.

(தொடரும்)

---

# கன்றும் - அரசும்[1]

[சேலங்கிழார்]

கற்றோர்க்கின்பம் கைமேலுதவும் இன்சுவைக் கவிகள் தமிழ்நூற்களில் உள; எனினும், கடவுள்பாலும் அவன் அடியார் பாலும் அன்பு பெருக்கி, மனமுருக்கி, இம்மையே மறுமை யின்பம் எய்துவிக்க வல்லதாய்த் தலைசிறந்து நிற்கும் நூல் பெரிய புராணம் ஒன்றுமே என்பதனை மறுப்போர் இலர்.

அந்நூலின்கண் சுவைநிரம்ப, ஆழ்ந்த பொருள் பொதிந் துள்ள செய்யுட்களில் சிலவற்றை எடுத்துக் காட்டிக் கற்போர் இவ்வகை ஆராய்ச்சித் துறையில் ஈடுபட்டுத் தாய்மொழித் தொண்டு புரிதல் இக்காலத்துக்கு ஏற்றதாம் எனக் காட்டுங் குறிப்பால் இக்கட்டுரை எழுவதாயிற்று.

திருஞான சம்பந்தப் பெருமானார் அவதரித்து, இறைவ னருளால், சின்னஞ்சிறு பிராயத்தே தெய்வம் மணக்கும் திருப் பதிகங்கள் பாடிப் பல அற்புதங்களை நிகழ்த்துஞ் சிறப்பைக் கேட்டு, வியப்பும் காதலும் மீதூர, அவரை நேரிற்காண மிக்க ஆவலுடன் திருநாவுக்கரசர் சீகாழி செல்கின்றார். அவரை எதிர் கொண்டேற்றுப் பிள்ளையார் (ஞானசம்பந்தர்), தோணியப்பர் கோயிலுக்கு அழைத்துப் போகின்றார் என்னும் செய்தி கூறு மிடத்து—(திருநாவுக்கரசு நாயனார் புராணம் கஅடு-ம் பாடல்).

"அருட்பெருகு தனிக்கடலும் உலகுக் கெல்லாம்
அன்புசெறி கடலுமா மெனவும் ஓங்கும்
பொருட்சமய முதற்சைவ நெறிதான் பெற்ற
புண்ணியக்கண் இரண்டெனவும் புவனம் உய்ய
இருட்கடுவுண் டவருளும் உலக மெல்லாம்
ஈன்றாள்தன் திருவருளும் எனவும் கூடித்
தெருட்கலைஞா னக்கன்றும் அரசும் சென்று
செஞ்சடைவா னவர்கோயில் சேர்ந்தா ரன்றே."

என அருளப்பட்டது.

இக்கவியின் திரண்ட பொருள்:—அருட்பெருகு தனிக் கடலும் அன்பு செறிகடலும் போலவும், சைவ சமயம் பெற்ற இருகண்களே போலவும், இறைவன் திருவருளும் அம்மையின் திருவருளும் போலவும் ஞானசம்பந்தரும் நாவரசப் பெருமா

1. ஆசிரியர்: அ. வரதநஞ்சையனார் அவர்களின் கைக்குறிப்பி னின்று எழுதிய கட்டுரை.

ளுரும் கூடிப்போய்ச் சிவபெருமான் திருக்கோயிலிற் சேர்ந்தார்கள் என்பதாம்.

இதில், திருஞான சம்பந்தரும், திருநாவுக்கரசருமாகிய இருவரும் ஒன்று கூடிச் சென்று சேர்ந்ததைக் கருத்துறக் கொண்டு, அருட்கடல் அன்புக்கடல்; சைவத்தின் இருகண்கள்; சிவம் சத்தி இவர்கள் அருள் என மூவகை உவமம் வருவிப்பானேன்? எனின், அவர்கள் செய்கை மூன்றாயினமையால் என்க! எங்ஙனம் எனின், முதலில் இருவரும் கூடினார்கள்; பின், வழிச் சென்றார்கள்; திருக்கோயில் சேர்ந்தார்கள்!

கடலும் கடலும் ஒன்றுபட்டாற்போல இருவரும் வேற்றுமையற ஒரு நீர்மையராய்க் கலந்ததும், இரு கண்களும் ஒரு பொருளையே நோக்குதல்போல ஒப்பற்ற பரம்பொருளை வழிபடும் ஒரு நோக்கம் உடையராய்ச் சென்றதும்; இறைவனருளும் சத்தியினருளும் பிரிவறக் கலந்து உயிர்க்குலங்கட்கு இன்பமளித்தாற் போல இருவருள்ளமும் ஒன்றுபட்டு அருகிலுள்ள அடியார் மனங்களிப்பச் சேர்ந்தார்கள் எனக் குறிக்கின்றார்.

அற்றாயின், சம்பந்தர் நாவரசர் என்னுமிவருள் அருட்கடல் போல்பவர் எவர்? அன்புக்கடலெனப் பெற்றோர் யாவர்? இறைவனருளுக்கும் இறைவியருட்கும் தனித்தனி உவமிக்கப் பெற்றோர் எவர்? என்னும் கடா எழுமன்றோ? இதனை ஆராய்வாம்!

திருநாவரசர் தம்மைக் காணவருகின்றார் ஆதலின் முற்பட்டுப் பிள்ளையாரே எதிர்சென்றழைத்தல் மரபாம். ஆதலின், அருட்கடலைப் பிள்ளையாரோடு ஒப்பிடலாம்; அன்புக்கடல் நாவரசராகக் கொள்வோம் அருட்பெருகு கடல் என்பதனோடு அமையாது 'தனிக்கடல்' என ஓர் கருத்துடை யடைமொழி புணர்த்தினார், இளம்பருவத்தே உலகீன்ற முதல்வியின் திருமுலைப்பாலூட்டி யாளப்பட்டார் பிறரின்மையின், அப்பெருமை புலப்படற்கு. அன்றியும்,

நாவரசரோடு கோவில்புக விருந்த திருக்கூட்டத்தாருடன் போந்த சம்பந்தர் அத்திருக்கூட்டம் பிற்படத் தாம் முற்பட்டு விரைந்து கூடினார் என்றொரு பொருளும் தோன்றுவதாம். 'பின்' இருவரும் சென்றதற்குச் சைவத்தின் இருகண்கள் உவமிக்கப்பட்டன. வலக்கண்ணனையார் எவர்? இடக்கண் போல்வார் எவர் என்பது இங்குக் கேள்வி. பெரியாரை வலத்தே கோடலும் அன்றி அன்பு மிக்காரை வலப்புறத்திருத்தலும் மேலோர் நெறி, கண்ணப்ப நாயனாரை இறைவன் "என் வலத்தின் மாறிலாய் நிற்கவென்று மன்னுபே ரருள் புரிந்தார்" என்பத

றும் இம்முறை தெளிக! ஆதலின் வலக்கண்போல்வார் திருநாவரசரே எனல் ஏற்புடைத்து.

பின்னர், இறைவன் கோயில் சார்ந்தபோது, இறைவன் திருவருள், இறைவி திருவருள் போல்வார் யாவர்? இவ்வாறு குறித்தற்குக் காரணம் என்னை? என்னும் வினாவிற்கு, சிவம் அறிவாயும், சத்திசெயலாயும், அறிவு செலுத்துழிச் செல்லும் செயல்போன்று, பிள்ளையார் முற்சென்று அவ்வக் கோயில்களைக் காட்ட நாவரசர் கண்டனர் என்பார் இங்ஙனம் கூறினார்.

மேலும், இருள் கடுவுண்டவர் அருளும், புவனமெல்லாம் ஈன்றாள் தன் திருவருளும் என விதந்தோதியது, சூலைநோயால் துயருறுத்திப் பின் அதை நீக்கி அடிமைகொண்டருளியது நாவரசரையாதலின் அவர் இருட்கடுவுண்டவர் அருள் எனக் குறித்து ஓதப்பெற்றார். மூன்று பிராயத்தளவையில் அம்மையின் திருமுலைப்பாலுண்டருளிய சம்பந்தப் பெருமானை, உலகமெலாமீன்றாள் தன் திருவருளுமென உவமத்தாற் சுட்டிப்போந்தார் என்னும் நுண்பொருளுங் காண்க.

இம்மூன்று உவமைகட்கும் ஏற்பக் கூடி, சென்று, சேர்ந்தார் எனமூன்று வினைச்சொற்களும் அடுக்கி வருதலும் அறிக. மேலும்;

ஞானக்கன்று, எனச் சம்பந்தப் பெருமானையும், அரசு எனத் திருநாவுக்கரசரையும் குறித்தது முன்னவரது இளமையும் பின்னவரது தலைமையும் விளக்கற்காம்.

இக்கவியால், மெய்யடியார்களை எதிர்கொள்ளும் முறையும், அவர்களோடு உவப்பத் தலைக்கூடி மகிழும் பெற்றியும், இறைவன் திருக்கோயிலுக்கு அழைத்துச் செல்லும் மரபும் உலக வழக்கத்தோடு ஒப்ப நிகழ்தலும் அறிந்து மகிழ்தற் பாலது!

முன்னர் அருட்கடலென முத்தமிழ்விரகராகிய ஞானசம்பந்தப் பெருந்தகையைக் கூறி, இடையில் சைவம் பெற்ற இருகண் என அவர்களுள் வேற்றுமையே கலவாத ஒற்றுமையைப் புலப்படுத்திப் பின், இறைவனருளோடு உவமிக்கப்படும் திருநாவுக்கரசரை முன்னர் நிறுத்தி, உமையவள் அருளோடு உவமிக்கப்படும் ஞானசம்பந்தரைப் பின்நிறுத்தியது, திருநாவுக்கரசரை முன்னே வணங்கச் செய்து, தாம் பின்னே இறைவனை வணங்கினார் என்பதையும், திருநாவுக்கரசரை அழைக்குங்கால் தாம் முற்பட்டுச் சென்றார் என்பதும் விளக்கும்வண்ணம் சொற்கள் அமைந்திருப்பதும் நோக்குக.

---

# முல்லைப்பண் ஆராய்ச்சி

[இராவ்சாகேப் கு. கோதண்டபாணி பிள்ளை]

(செல்வி, சிலம்பு - ௩௨, பரல் - எ, ௩௰௪-ஆம் பக்கத் தொடர்ச்சி)

தன்கிளை யென்பது யாரைக்குறிக்கும்? கிளை என்பது ஐந்தாம் நரம்பைக் குறிக்கும் என முன்பே கண்டோம். ஆனால் அடியார்க்கு நல்லார் "தன்கிளை" என்பதற்குக் குரலின் கிளை துத்தம் எனப் பொருள் கண்டார். குரலிலிருந்து துத்தம் இரண்டாம் நரம்பு. இரண்டாம் நரம்பை எவ்வாறு கிளை எனக் கொண்டார்? 'இங்கு ஏதோ பாடம் பிறழ்ந்துள்ளது' என ஆசிரியர் வேங்கடசாமி நாட்டார் தாம் கண்ட உரையில் "தனது கிளையாகிய துத்த நரம்பாகிய பின்னையை நோக்கி" என அடியார்க்கு நல்லார் உரை காணப்படுகிறது, குரலுக்குத் துத்தம் இணையும், இளி கிளையுமாகலின் துத்தத்தைக் கிளை என்றல் பாடப் பிறழ்ச்சிபோலும்" எனக் குறிப்புரை வரைந்தார். இதை ஒட்டியே, "தனது கிளையாகிய இளியிடத்து நின்ற பலராமனாகிய அவனை நோக்கி," என உரையும் கண்டார். பாடப் பிறழ்ச்சி என்பதற்குத் தக்க சான்றுகளைக் காணோம். கிளைஇயைபை முன்பே விளக்கியவாறு குரலுக்குக்கிளை இளி, இளிக்குக்கிளை துத்தம், துத்தத்திற்குக்கிளை விளரி, விளரிக்குக்கிளை கைக்கிளை எனக் கிளை இயைபு அமைகின்றது. இங்கே கூறிய ஐந்து நரம்புகளுமே கிளை நரம்புகளாகின்றன. இந்த ஐந்து நரம்புகளையுமே கிளை எனக் குறிப்பிடும்பழக்கம் இருந்தது என அடியார்க்கு நல்லாரின் வேனிற்காதை (வரி, ௩௩, ௩௪) உரை காட்டுகின்றது. அங்கு அவர் இதைக் குறித்துக்காட்டும் மேற்கோள் :—"கிளை எனப்படுவ கிளக்குங்காலைக் குரலே, இளியே, துத்தம், விளரி, கைக்கிளை என ஐந்தாகுமென்ப" என்பது. இச் சான்றையே எடுத்துக் காட்டி நாட்டார் உரையை இராமனுதனும் மறுத்துள்ளார். இங்கு அடியார்க்கு நல்லார் எடுத்துக் காட்டியதும் இசை நூல் முறையே யாதலின், துத்தத்தைக் கிளைஎன உரை வகுத்தது இசை நூல் வழக்கிற்குப் பொருந்தவே அமைகின்றது.

இவ்வுரை இசை இலக்கணத்திற்குப் பொருந்துவதே யாயினும், பொருத்தமின்மை மற்றொருவகையில் காணப்படுகின்றது. இவ்வுரையைப் பாட்டின் பொருளோடு முன்னும் பின்னும் பொருத்திக் காணுங்கால், இது பொருளொடு பொருந்தாமை காணப்படும். 'குரற்கொடி துத்தத்தை நோக்கிப் பாடுதும்' என்றால், பாடவேண்டியவர் அல்லது பாட்டை எடுக்க வேண்டிய

வர் யார்? குரலாவது பாட்டை எடுத்தல் வேண்டும் அல்லது துத்தமாவது பாட்டை எடுத்தல் வேண்டும். அவ்வாறு நிகழ்ந்ததா? இல்லை. குரல் பாட்டெடுத்தாள் இலள்; துத்தமும் பாட்டெடுத்தாள் இலள். இவர்கள் பாட்டெடுத்தார்களெனப் பாட்டின் பொருளிற் காணேம். பாட்டு எடுத்தவளாகப் பாட்டு யாரைச் சுட்டுகிறது? மீண்டும் அடியார்க்கு நல்லார் உரையைக் காண்போம். "பாட்டெடுக்கின்றவள், குரலென்னும் நரம்பு மந்த சுரமாக, இளி என்னும் நரம்பு சமன் சுரமாக, வந்தமுறையே, துத்தம் என்னும் நரம்பு வலிசுரமாக, விளரியையும் மந்த சுரமாகப் பிடிக்கின்றவள் தன் நட்பு நரம்பாகிய துத்த நரம்பாகிய வட்குப் பற்றுப் பாடுகின்றாள்" என்பது அவர் கூறும் பாட்டின் பொருள். இப்பொருளின்படி பாட்டெடுத்தவள் எவள்? பாட்டெடுத்தவள் எவள் என வெளிப்படையாக உரையில் கூறினரிலர். 'தன் நட்பு நரம்பாகிய துத்த நரம்பாயவட்குப் பற்றுப் பாடுகிறாள்" எனக் குறிப்பிட்டதால், விளரியே பற்றுப் பாடினவள் அல்லது பாடினவள் எனப் பெறப்படும். துத்த நரம்பு விளரிக்கே நட்பு நரம்பாவது, மற்ற நரம்புகளுக்கன்று. ஆதலின் விளரியே பாடினவள் என ஏற்படுகின்றது. இவ்விளரியைத் தவிர வேறு யாரும் பாடினர் எனப் பாட்டில் காணப்படவில்லை; இப்பாட்டின் முன்னரும் காணப்படவில்லை; பின்னரும் காணப்படவில்லை.

'குரல் துத்தத்தை நோக்கிப் பாடுதும்' எனக் கூறவும் அவ்விருவரில் ஒருவரும் பாடாராக வேறு ஒருவர் பாடியது இசைமுறை ஒழுக்கமாகுமா? இவ்வாறு பாடுதல் ஒழுக்கமற்றார் செயலாக முடிகின்றது. இவ்வாறு கயவர் கூட்டத்தில் நிகழலாம்; தொன்றுபடுமுறையில் நிறுத்தி, ஆடற்சீர் ஆய்ந்து இசை முறை பிறழாது சுரம் பிடிக்கும் இசைமுறை ஒழுக்கமும், ஆடல்முறை ஒழுக்கமும் நிறைந்தோரிடம் நிகழ்தல் தக்கதா? இது முதற் சிக்கல்.

இஃது இசைமுறை ஒழுக்கத்தின் இழிவோடு நின்றதன்று; இத்தகு ஒழுக்கமின்மையைப் பாட்டில் அமைத்த புலவனையும் தாவுகின்றது; அவன் புலமைக்கும் இழுக்கைச் சேர்க்கின்றது. ஒருவரை நோக்கிப் பாடுதும் என்றபோது, அவர் பாடாராயின் அவ்வாறு கூறியதாகப் பாட்டில் அமைப்பதின் நோக்கம் யாது? கூத்துட்பட்டவர்கள் இசைமுறை அற்றவர்கள் எனக் காட்டுதலா புலவன் கருத்து? அன்று, அன்று. அவ்வாறு கூறியதன் பயன்தான் யாது? பயன் ஒன்றையும் காணேம். இத்தகு பயனற்ற உரையாடல்கள் இளங்கோவடிகள் போன்ற பேராசிரியர்களின் காப்பியங்களில் இடம் பெறுவனவா? யார் வேண்டுமாயினும்

பாடுதல் தகும் என்பதே கோட்பாடாயின், ஒருவரை நோக்கிப் பாடுதும் என ஏன் கூறினர்? எழுவர் மங்கையர் அங்கு அமர்ந் திருக்கவும் அவருள் ஒருவரைக் குறிப்பிட்டுப் பாடுதும் என்றது பாட்டெடுப்பதின் இசை நுட்பம் காட்டுமாறு அமைந்ததாகக் கொள்வதா அல்லது புலவன் தக்க கருத்துக்களைக் காணாது பாட்டின் வரிகளை நிறைக்கச் சேர்த்த வெற்றுரை எனக் கொள் வதா? இஃது இரண்டாம் சிக்கல்.

## பாடுதும் எனக் கூறியது யார்?

குரற்கொடி 'பாடுதும்' எனக் கூறினள் என்பது பாட்டு. குரற்கொடி என்றது யாரை? குரற்கொடி என்பதற்கு "குரற் றனத்து நின்ற மாயனாகிய அவள்" எனப் பொருள் கண்டார் அடியார்க்கு நல்லார். அவரை ஒட்டியே நாட்டார் அவர்களும் "குரல் நரம்பில் நின்ற மாயவனாகிய அவள்" என உரை கூறினர். மாயனாகிய அவள் குருந்தொசித்தாற் (குருந்தொசித்த மாய வனைப்) பாடுதும் என்றாள் என்பது பெறப்படும். மாயவன் தம் புகழையே தாம் பாடுவோம் என்றது பொருத்தமற்றதாக அமை கின்றது. தம் புகழை அல்லது செயலைத் தாமே பாடுவோம் என்பது சான்றோர் செயலன்றே! தம் செயலைத் தாமே பாடுதல் அல்லது பிறருடன் சேர்ந்து பாடுதல் அற்பர் தம் செயலே யாகும். அதிலும் தன் மனையாளை (துத்தமாகிய பின்னையை) நோக்கித் தன் புகழை அல்லது தன் செயலைப் பாடுதும் என்றது அற்பர் தம் செயலினும் இழிதகவுடையதாகக் கருதப்படும். இது தமிழர் தம் ஒழுக்கமும் அன்று, பண்பாடும் அன்று.

"பரந்தோரெல்லாம் புகழத் தலைபணிந்திறைஞ்சி யோனே" எனத் தலைவனைப் புகழ்ந்தார் அரசில் கிழார் (புறம் ௫௩). "கோவெனப் பெயரிய காலை ஆங்கது தன் பெயராகலின் நாணி"னன் ஓரி என்னும் பெருந்தகை. (புறம் ௧௫௨). "சான் றோர் புகழுமுன்னர் நாணுப" என்றார் நக்கண்ணனார். (குறுந் தொகை ௨௫௨). "தம் புகழ் கேட்டார்போல் தலை சாய்த்து மரந்துஞ்ச" என உவமை காட்டினர், நல்லந்துவனார். (நெய்தற் கலி ௨). சங்க காலத்தோடு நின்றுவிட்டதன்று இப்பண்பாடு. "பிறர் தன்னைப் பேணுங்கால் நாணலும்..........ஊராண்மை என்னும் செருக்கு" என்னும் திரிகடுகம். சீதையைக் கண்டு வெற்றியுடன் மீண்ட அனுமன், தன் வீரச்செயல்களைத், தன்னைக் காணக் காத்திருந்த வானரர்கள் முன்னர், மிகமிக விரி வாகக் கூறினன் என வான்மீகம், இரண்டு சருக்கங்களில் ௨௦௨- கவிகளால் கூறுகின்றது. இத்தற் புகழ்ச்சியை அடியோடு மாற்றி, ......"போரில், நீண்ட வாளரக்கரோடு நிகழ்ந்ததும் நெருப்புச்

சிந்தி மீண்டதும் விளம்பான் தான்தன் வென்றியை உரைப்ப வெள்கி" எனக் காரணமும் காட்டி, தமிழர் பண்பாட்டை ஓர் எதிர்பண்பிடைப் பெய்து என்றும் ஒளிகாலுமாறு செய்தார் கம்பர். இத்தகு பண்பாட்டை அடிப்படையாகக் கொண்ட தமிழ் நாட்டின் தவப்பெரும் புலவர், இப்பண்பாட்டிற்கு நேர் மாறுகத் தன்மனைவியையே நோக்கித் தன் புகழைப் பாடுவோம் எனக் கூறியதாகத் தம் காவியத்தில் அமைத்திருப்பாரா? கரு துக. இது மூன்றும் சிக்கல்.

மாயவன் முன்னர் அவன் புகழைப் பின்னை யல்லாத பிறர் பாடுதலும் தகவுடைத்தன்றே என்பதும் கருதத்தக்கது. இவ் வாறு தெய்வத்தின்முன் தெய்வத்தின் புகழைப் பாடுதல், 'முன்னிலைப் பராவல்,' 'படர்க்கைப் பராவல்' என இருவகைப் படும். இவ்விருவகைப் பராவலும் கூத்துள் நிகழ்தலும் உண்டு. இவ்வாறு தன் புகழைப் பாடுங்கால் தலைசாய்த்து நிற்றலே மாயோன் அவிநயம் என்பர். இதுவே கூத்துள்படுவோர் முறை யும் ஒழுக்கமும் ஆகும். தெய்வமாயினும் மானிடனாயினும், தன் மனைவியையே நோக்கித் தன் புகழைப் பாடுதும் என வேண்டு வது, தமிழர் பண்பாட்டிற்குச் சிறிதும் பொருந்த மற்றது. இனி இது பாலசரிதையாதலின் தீமையற்றதாகும் எனின், அதுவும் தக்கதன்று. 'தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும்' என்பர் ஆதலின் ஒழுக்கமற்றவற்றில் இளமையில் பழகுதல் மரபு அன்று.

குரல்கொடி தன்னை மாயோனுகக் கருதி இவற்றைக் கூறினுள் அல்லள்; தன்னைக் குரலாகவே கருதி இவற்றைக் கூறியதாகக் கொள்ளலாமே எனில், அதுவும் பொருத்தமற்றதா கின்றது. மேலே கூறியவை கூத்துட்பட்டோர் சொற்களும் செயலும் ஆவன. படைத்துக்கோள் பெயரிட்டு, ஆடற்சீர் ஆய்ந்து, கூத்துட்பட்ட குரல், மாயோனுக நடித்தலே முறை இவ்வாறன்றி, மாறுகொள நடித்தாள் என்பது பண்பாட்டிற் காணும் வழுவைக் கூத்திற்கு மாற்றுவதாகுமே யன்றி, வழு வையே போக்குவது ஆகாது.

## பாட்டு எடுத்தது யாருக்கு?

'குரல் மந்தமாக' எனத் தொடங்கும் பாட்டை மீண்டும் ஒருமுறை ஆராய்தல் வேண்டும்.

"குரல் மந்தமாக இளி சமனுக
வரன்முறையே துத்தம் வலியா—உரனிலா
மந்தம் விளரி பிடிப்பாள் அவள்நட்பின்
பின்றையைப் பாட்டெடுப் பாள்"

என்பது பாட்டு. இங்கு "அவள் நட்பின் பின்றையைப் பாட்டெடுப்பாள்" எனப் பாட்டுக் கூறுகிறது. பின்றையை என்பதனைப் பின்னையை என்பதன் மரூஉவாகக்கொண்டு, பின்னையை என்பது பின்னைக்கு என்பதன் உருபு மயக்கமாகக் கொண்டார் அடியார்க்கு நல்லார். பின்னை துத்த நரம்பில் நின்றதால் துத்தத்திற்குப் பாட்டெடுத்தாள் என அவர் உரையும் கூறினர். "தன் நட்புச் சுரமாகிய துத்த நரம்பாயவட்குப் பற்றுப் பாடுகின்றாள்" என்பது அவர் உரை. விளரியிலிருந்து நான்காம் சுரம் துத்தம் அதுவே நட்பின் சுரம் என்பது. 'அவள் நட்பின்' எனக் கூறியதே நட்பின் நரம்பாகிய துத்தத்தை வெளிப்படையாகக் குறிப்பிடுகிறபோது, பின்னும் 'பின்னை' எனக்கூறி, அவள் நின்ற சுரம் துத்தம் எனக் கூறக் காரணம் யாது? 'நட்பின்' எனத் துத்தத்தை, கூறிப் பின் அதையே பின்னை என்றும் குறிப்பிட்டுக், கூறியதுகூறலா அடிகள் புலமையின் பெருமை? ஒரு பொருளை உணர்த்திய பின், அதே பொருளை வேறொரு சொல்லால் குறித்தார் என்பது பொருந்துமா? பாட்டில் பொருந்தும் பொருளை அமைக்கும் திறனற்று, முன்கூறிய பொருளையே திருப்பித், திருப்பி, வேறு சொற்களால் கூறி, வரிகளை நிறைக்கும் புலவர் இளங்கோவடிகள் எனக் கருதுதல் தகுமா? இது நான்காம் சிக்கல்.

துத்தத்திற்குப் பாட்டெடுத்தது அல்லது பற்றுப் பாடியது தான் எதற்கு? துத்தம் தனக்குப் பாட்டெடுக்குமாறு கூறினளா? பாட்டையே மீண்டும் காண்க. 'பாடுதும்' எனக் கூறிய குரல் துத்தத்திற்குப் பாடுக எனப் பணித்ததுமில்லை. விளரி வரையில் ஐந்தின் தொடர்பை, கிளைஇயைபையே மேற்கொண்டு, சுரங்கள் பிடித்த விளரி, கடைசியில், அம்முறையை மாற்றி, நான்கின் தொடர்பை அல்லது நட்பியைபை மேற்கொள்ளக் காரணம் யாது? ஐந்தின் தொடர்பில் உள்ளவளுக்கே பாட்டெடுத்தால் தவறேதும் நேருமோ? பாடுதும் என்ற குரலுக்கு விளரி கிளையுமன்று, நட்புமன்று, பகையிடத்தில் இருப்பவள். குரலிலிருந்து விளரி ஆறும் தானத்து இருப்பவள். ஆறும்தானம் பகை இடம் என்னும் இசைநூல். விளரிக்கு மூன்றும் தானத்தில் இருப்பவள் குரல். மூன்றும் தானமும் பகைத்தானம் என்னும் இசைநூல். குரலிலிருந்து பகையிடத்தில் நிற்பவள் விளரி. விளரியிலிருந்து பகையிடத்தில் இருப்பவள் குரல். இவ்வாறு ஒருவருக்கொருவர் பகையிடத்தில் இருப்பவரில் ஒரு பகையிடத்திருந்து ஒருவர் பாடுதும் எனக்கூற மற்றொரு பகையிடத்திருந்து மற்றொருவர் பாடுதல் இசைமுறை யாகுமா? இவ்வாறு பகைப் புலத்திருந்த விளரி, தன்னை யாரும் பாடுக எனக் கூறாதிருக்கவும், தான்தோன்றியாகக் குறுக்கிட்டு, இசைமுறைக்கு மாறாகக், கட்டுப்பாடற்றவ

ளாகத், தானே முன்பு சுரம்பிடித்த முறைக்கும் மாறாகத், தன் பகைப் புலத்திருந்த குரல் பாடுதும் என்ற பாட்டைக் கெடுப் பதற்காகப் பாட்டெடுத்தாள் எனக் காட்டவா, இளங்கோவடிகள் இவ்வாறு பாட்டமைத்தார்? இசை நுட்பம் பலவும் தெரிந்த அடிகளின் கருத்தாகுமா இது? "வல்லான் வகுத்ததே வாய்க் கால்" என்னும் முதுமொழி, இசைக்கும் பொருந்தும்; இசையை யாரும் எவ்வாறும் பாடலாம், என்பதைக் காட்டவே, அடிகள் இப்பாட்டை எழுதி ஆய்ச்சியர் குரவையில் சேர்த்தார் எனக் கொள்வதா, அல்லது தொன்றுபடுமுறையில் முல்லைத் தீம்பாணி யில், எங்கெந்தச் சுரங்கள், எவ்வாறு பயின்றன, இசைமுறை வழுவாது, எவ்வாறு சுரம்பிடித்துப் பாட்டெடுத்தாள் என்பதை உணர்த்தவே இப்பாட்டை யாத்தார் எனக் கொள்வதா? இஃது ஐந்தாம் சிக்கல்.

இவ்வைந்து சிக்கல்களும் சேர்ந்து, அடிகள் குறிப்பிட்ட ஐந்து நரம்புகளில் கடைசி நரம்பை, எங்கெங்கோ சுற்றிச் செருகித் தலைகால் தெரியாதவாறு 'சிக்குறச்சேமம்' செய்தன. காலமாறுதல்களால் தமிழர், இசைமுறைகளை மறந்தனர்; இச் சிக்குகள் எளிதே பிரிக்க முடியாதன வாயின; அவிழ்க்க முடி யாதன வாயின. இச்சிக்கல்களைப் பிரித்தெடுத்து அடிகள் குறிப் பிடும் ஐந்தாம் நரம்பின் உண்மை வடிவத்தைக் காணமுயல் வோம்.

## குரற்கோடி என்பதற்கு இங்குப் பொருந்தும் பொருள்

குரற்கொடி தன்கிளையை நோக்கிப் பரப்புற்ற
கொல்லைப்புனத்துக் குருந்தொசித்தாற் பாடுதும்
முல்லைத்தீம் பாணி யென்றாள்"

என்னும் பாட்டின் பகுதியை நாம் மீண்டும் காண்போம். குரற் கொடி என்ற சொல்லையும், அதற்கு உரையாசிரியர்கள் தந்த பொருளையும் மீண்டும் ஆராய்வோம். "குரற்கொடி என்பதை "குரற்றானத்து நின்ற மாயவளாகிய அவள்" என்றார் அடியார்க்கு நல்லார். இதை ஒட்டியே நாட்டார் அவர்களும், "குரலிடத்து நின்ற மாயவளாகிய அவள்" என்றார். இவ்விரு ஆசிரியர்களும் குரற்கொடி என்பதைக் குரலாகியகொடி எனப் பண்புத் தொகை யாகக்கொண்டு, மேலே கூறியவாறு, பண்பு விரித்துப் பொருள், கூறினர். கொடிஎன்பது கொடிபோலும் மகளுக்காகி, குரல் தானத்து நின்ற குரலாகிய ஒருத்தியை உணர்த்திற்று என்பர். குரற்கொடி என்பதை குரலின் கொடி என ஆறும் வேற்றுமைத் தொகையாகப் பொருள்கூற இலக்கணம் இடந்தருகின்றது. (கல்+குறை) கற்குறை, கல்லின்குறை எனவும் (முயல்+காது)

முயற்காது, முயலின்காது எனவும் இலக்கியங்களில் பயிலக் காணலாம். லகரம் இங்கு றகரமாகத் திரிதல் இயல்பே. குரலின் கொடி குரலாகிய மாயவனின் காதற் கிழத்தி பின்னை எனப் பொருள் விரியும். துத்த நரம்பில் நின்றவள் பின்னை. துத்த நரம்பாகிய குரற்கொடி பின்னை, பாடுதும் எனக் கூறினாள் எனப் பொருள் பொருந்துகிறது. இவ்வாறு, பொருள் கண்டால் மேலே காட்டிய சிக்கல்களில் பல தாமே அவிழ்கின்றன. பின்னை, தன்கணவனாகிய குருந்தொசித்தாற் பாடுதும் எனக் கூறியது மிகப் பொருத்தமாக அமைகின்றது. தற்புகழ்ச்சி மறைகின்றது. துத்தம் தன் கிளையை நோக்கிப் பாடுதும் என்றாள். துத்தத்தின் கிளை விளரி. விளரி பாடினாள். விளரி, தான்தோன்றி அல்லள்; குறுக்கே புகுந்து பாடினவளும் அல்லள். பாடுதும் எனத் தன்னைப் பணித்தவாறு பாடினாள். குரல் துத்தத்தை நோக்கிப் பாடுதும் எனவும், துத்தம் பாடாது, மற்றொருவர் பாடியதால் ஏற்பட்ட இசை முறை ஒழுக்க வழுவும் நீங்கியது. குரல் துத்தத்தை நோக்கிப் பாடுதும் என்றது பயனற்ற தானது, வெற்றுரையானது என்பதும், அத்தகு வெற்றுரைகளைப் பாட்டில் பெய்த புலமை இழுக்கும் போய் மறைந்தன. குரலின் கொடி எனக் கொள்ளுங்கால் பாட்டின் பொருளமைதி, முன்னுக்குப் பின் பொருத்தம், எல்லாம் வழுவின்றி அமைகின்றன. இவ்வாறு நான்கு சிக்கல்கள் அவிழ்க்கப்பட்டனவாயினும், ஐந்தாம் நரம்பு இன்னும் வெளிவந்திற்றில்லை. ஐந்தாம் நரம்பைக் காண, எஞ்சி நிற்கும் ஐந்தாம் சிக்கலையும் அவிழ்த்தலே வேண்டும்.

## விளரி யாருக்குப் பாட்டெடுத்தாள்?

"குரல் மந்தமாக இளி சமனாக
வரன்முறையே துத்தம் வலியா—உரனிலா
மந்தம் விளரி பிடிப்பாள் அவள் நட்பின்
பின்றையைப் பாட்டெடுப் பாள்"

மேலே கண்ட வினாவிற்கு "அவள் நட்பின் பின்னைக்குப் பாட்டெடுத்தாள்" என்பது பாட்டின் விடை. விளரியின் நட்பு நரம்பு துத்தம். துத்தத்தில் நின்றவள் பின்னை ஆதலின் விளரி துத்த நரம்பிற்குப் பாடுகின்றாள் என்பது உரையாசிரியர்களின் கருத்து. இவ்வாறு பொருள் கொள்ளுமிடத்துப் பல இடர்ப்பாடுகள் நேர்கின்றன என முன்பே கண்டோம். விளரிவரையில் ஐந்தின் தொடர்பையே, கிளை முறையையே தழுவியவள், அம்முறையை நழுவவிட்டு, நட்புமுறைக்கு அல்லது நான்கின் தொடர்பு முறைக்கு மாறியதற்குக் காரணம் ஒன்றையும்

காணோம். விளரி துத்தத்திற்கன்றி, வேறு யாருக்காவது பாடினள் எனக் கொள்ள இடமுண்டா என்பதே இப்போது ஆராய்வது.

மாற்றியமைத்த உரையின்படி துத்தமே பாடுதும் எனக் கூறியவள். அவள் யாருக்குப் பாட்டு எடுக்க அல்லது யாரைப் பாடுக எனக் குறிப்பிட்டாள் என்பதையும் முன்பாட்டே காட்டுகின்றது. "கொல்லைப் புனத்துக் குருந்தொசித்தாற் பாடுதும் முல்லைத் தீம்பாணி என்றாள்" என்பது பாட்டு குருந் தொசித்தானைப் பாடுதும் அல்லது குருந்தொசித்தானுக்குப் பாட்டு எடுக்க என்பதே அவள் கூறியது. தன்னைப்பாடுக அல்லது தனக்குப் பற்றுப்பாடுக என அவள் பணித்தாள் அல்லள். ஆதலின் விளரி யாருக்குப் பாட்டு எடுத்தல் வேண்டும்? குருந்தொசித்தானுக்கே பாட்டு எடுத்தல் வேண்டும், துத்தத் திற்கு அன்று மற்று எவருக்கும் அன்று. விளரி அவ்வாறு செய்தனளா? பாட்டெடுத்தலைக் குறிக்கும் பாட்டின் கடைசி வரி" அவள் நட்பின் பின்றையைப் பாட்டெடுப்பாள்" என்னும் வரியைச் சோதிப்போம். இவ்வரியின் உரையில் ஒரு குறை பாடு உண்டு எனச் சற்று முன்பு கண்டோம். அதையும் இங்கு நினைவு கூர்தல்வேண்டும் 'அவள் நட்பின்' என்பது துத்த நரம் பையே குறிக்கவும் மீண்டும் அதே நரம்பைப் பின்னை நின்ற நரம்பு என ஒரே கருத்தை, இருமுறை, இருவேறு சொற்களால், சுட்டியது குறைபாடுடைத்து எனக் கண்டோம். இக் குறைபாடு நீங்கவும், பணித்தவாறு விளரி பாட்டெடுத்தாளா என்பதைக் காணவும் இவ்வரியை எவ்வாறு பிரித்தல் தகுமோ அவ்வாறெல்லாம் பிரித்துப் பொருள் காண்போம்.

இவ்வரிக்கு உரையாசிரியர் உரை முன்பே விளக்கப்பட்டது. அதன் இலக்கண அமைதியும் விளக்கப்பட்டது. அவற்றை இங்கு நினைவு கூர்வோம். "அவள் நட்பின் பின்றையைப் பாட் டெடுப்பாள்" என்பது பாட்டு. பின்றையை, பின்னையை என்பதன் மரூஉ. பின்னைக்கு என்பது பின்னையை எனவானது உருபு மயக்கம். அவள் நட்பின் + பின்னைக்கு + பாட்டெடுப் பாள் என்பது உரையாசிரியர்கள் பிரித்த முறை இவற்றை, நட்பின் பின் + ஐக்குப் + பாட்டெடுப்பாள் எனப் பிரித்தலும் தகும். நட்பின்பின் எனப்பிரித்தால் அது நட்பின் பின் னிருந்து, நட்பாகிய துத்தத்தின்பின், கைக்கிளையிலிருந்து, பாட் டெடுப்பாள் எனப் பொருள் தருகின்றது. தொன்றுபடு முறை யில் நரம்புகளை நிறுத்தியவாறு துத்தத்தின் பின் நிற்பவள் கைக் கிளை, இவ்வாறு பொருள் கண்டால் ஐந்தின் தொடர்பையே மீண்டும் பெறுகிறோம். பாட்டில் குரல் முதல் தொடங்கி விளரி

வரையில் சுரம் பிடித்த கிளைமுறை இயையே தொடர்ந்து கைக்கிளை வரையில் செல்கின்றது விளரியின் ஐந்தாவது நரம்பு, கிளை நரம்பு, கைக்கிளை. அடிகள் குறிப்பிடும் கடைசி நரம்பு நட்பு நரம்பன்று, கிளை நரம்பாகிய, கைக்கிளை நரம்பு என்பது வெளிப்படுகின்றது. நட்பு இயைபும் கிளை இயைபும் இசையிற் கலந்த வழுவும் நீங்குகின்றது. முல்லைத் தீம்பாணியில் முற்றும் கிளை முறை இயையே அமைகின்றது. ஒரே கருத்தை இருமுறை கூறிய வழுவும் நழுவுகின்றது.

இனி பாட்டெடுத்தாளைப் பின்பற்றுவோம். ஐக்குப் பாட்டெடுத்தாள் என்பது விளக்கமின்றி எஞ்சி நிற்கின்றது. ஐ என்பது தலைவன் என்று பொருள்படும். இந்த ஓரெழுத்தொரு சொல் இப் பொருளில் சங்க இலக்கியங்களில்பல இடங்களில் பயிலக்காணலாம். ஐக்குப் பாட்டெடுத்தாள், தலைவனுக்குப் பாட்டெடுத்தாள், குருந்தொசித்த தலைவனுக்குப் பாட்டெடுத்தாள், எனப் பொருள் அமைகின்றது. துத்தமாகிய பின்னை விளரியை நோக்கிக் குருந்தொசித்தானைப் பாடுதும் முல்லைத் தீம்பாணியால் என்றாள். விளரி அவ்வாறே குருந்தொசித்த தலைவனுக்குப் பாட்டெடுத்தாள் எனப் பொருள் முற்றிலும் பொருந்த அமைகின்றது. குரற் கொடி (துத்தம்) தன்கிளையை (விளரியை) நோக்கிக் குருந்தொசித்தானைப் பாடுதும் முல்லைத் தீம்பாணியால் என்றாள் குரல் மந்தமாக இளி சமனாகத் துத்தம் வலியா. விளரி மந்தமாகச் சுரம் பிடிப்பாள், அவள் நட்பின்பின் (கைக்கிளையிலிருந்து) (குருந்தொசித்த) தலைவனுக்குப் பாட்டெடுத்தாள். "கன்று குணிலாக் கனியுதிர்த்த மாயவன்" எனப் பாட்டு, முல்லைத் தீம்பாணி, முல்லைப் பண், தொடங்குகின்றது.

இவ்வாறு பொருள் கண்டால், பாட்டின் முற்பகுதி பிற்பகுதியோடு சென்று இயைகின்றது. முறைதவறி துத்தத்திற்குப் பாட்டெடுத்த குறையும், துத்தத்தையே மீண்டும் பின்னை எனக் குறிப்பிட்ட குறையும் நீங்கிவிட்டன. ஐந்து சிக்கல்களும் அவிழ்ந்தனவாயின. சிக்குண்ட ஐந்தாம் நரம்பையும் சிக்கறக் கண்டோம். கைக்கிளை நமக்குக் கைகொடுத்து நின்றது.

மேலே கூறியவாறன்றி வேறு ஒரு வகையாகவும் பொருள் கூறவும் இடம் உண்டு. கிளை என்பது ஐந்து கிளை நரம்புகளில் ஏதேனும் ஒன்றைக் குறிக்கும் என அடியார்க்கு நல்லார் மேற்கோள் காட்டியதை முன்பு கண்டோம் அவர் 'குரற்கொடி தன் கிளையை நோக்கி' என்ற விடத்துக் குரலுக்கு ஐந்தாம் நரம்பைத் தவிர்த்து, குரலுக்கு அடுத்த துத்தத்து நரம்பைக் கிளை எனப் பொருள் கூறினர். இதே முறையை நாமும் மேற்கொண்டால்,

துத்தத்தின் கிளை, கைக்கிளை எனக் கொள்ளல் தகும். 'குரற் கொடி தன் கிளையை நோக்கி'' என்பது, குரற்கொடி தன் கிளையாகிய கைக்கிளையை நோக்கி எனப் பொருள் தரும். துத்தத்திற்கு அடுத்து இருப்பது கைக்கிளை. கைக்கிளை துத்தத்திற்கு இரண்டாவது நரம்பாதலின், இணை எனப்படுமாயினும், முன்பு காட்டிய இசைநூல் மேற்கோளின்படி கிளை எனக் கொள்ளவும் தகும். அம்மேற்கோளில் காட்டிய ஐந்து கிளை நரம்புகளில் கைக்கிளையும் ஒன்று. இவ்வாறே, அடியார்க்கு நல்லாரும் உரைகண்டார் என முன்பே கண்டோம். இந்த உரையின்படியும், அடிகள் ஐந்து நரம்புகளையும் நேரே குறிப்பிட்டுள்ளார்; ஒரு நரம்பை உய்த்துணர வைத்தார் அல்லர் என்றும் துணியப்படும். ஆனால் பாட்டின் பின்வரிகள் "மந்தம் விளரிபிடிப்பாள் அவள் நட்பின் பின் ஐயைப் பாட்டெடுப்பாள்'' என்பன இப் பொருளுக்குப் பொருந்துவனவா என்பதையும் தெரிதல் வேண்டும். அவ் வரிகளுக்கு மந்தமாக விளரியைப் பிடிப்பாள் அவள் (அவ் விளரியின்) நட்பின்பின், பாட்டெடுப்பாள்' என இப்போது பொருள் அமைகின்றது. இப்போது பாட்டெடுத்தவள் கைக்கிளையாகின்றாள்; விளரி அல்லள். பாட்டின் பொருளாக இங்குக் கூறியவற்றை எல்லாம் ஒருசேரக் காணும்போது " துத்தம் தன் கிளையாகிய கைக்கிளையை நோக்கிக் கொல்லைப் புனத்துக் குருந்தொசித்தானைப் பாடுதும் முல்லைத் தீம்பாணியால் என்றாள். என்றவுடன், குரல் மந்தமாக, இளி சமனாகத், துத்தம் வலியாக, விளரி மந்தமாகப் பிடிப்பாள், அவ் விளரியின் நட்பின் பின், கைக்கிளை நரம்பிலிருந்து, கொல்லைப்புனத்துக் குருந்தொசித்த தலைவனுக்குப் பாட்டெடுத்தாள்'' எனப் பாட்டின் பொருள் ஆற்றொழுக்காக அமைகின்றது பாட்டை ஆரம்பித்தது கைக்கிளையிலிருந்தே ஆதலின் அந்த நரம்பை எவ்வாறு பிடித்தாள் என அடிகள் கூறினரிலர். குரல் முதல், மந்தம், சமன், வலி என்னும் வரன்முறையே, (வந்த முறையின்படியே) மீண்டும் விளரி மந்தமாக, கைக்கிளை சமனாகவும் சுரம் பிடித்தாள் என்பது பெறப்படும். இவ்வாறு கொள்க என்பதைக் குறித்தே அடிகள் 'வரன் முறையே துத்தம் வலியா' எனக்கூறி வருகின்ற முறையையும் குறிப்பிட்டார் போலும்.

இப் பொருள் முன்பு கூறிய விளரி பாட்டெடுத்த பொருளினும் சிறந்ததாகத் தோன்றுகிறது. விளரி பாட்டெடுத்தது இசை முறையின்படி தவறுடையதன்று. ஆயினும் விளரி கைக்கிளையிலிருந்து பாட்டெடுத்தாள் என்பதைவிட கைக்கிளையே அவள் இடத்திலிருந்து மற்ற சுரங்களையும் முறைப்படி பிடித்துப் பாட்டெடுத்தாள் என்பது மிகப்பொருத்தமாக

அமைகின்றது. முல்லைப் பண்ணுக்கு உயிர் நரம்பு, (ஜீவசுரம்) கைக்கிளை என்பர். ஆதலின் உயிர் நரம்பே பாட்டெடுத்ததும் மிகமிகப் பொருத்தமாகின்றது.

இவ்வாறு உரை கொள்ளுங்கால், இதில் ஒரு குறைபாடு காணப்படும். தன்கிளையை எனக் கைக்கிளையை முதலில் குறித்தபின் மறுபடியும், அவள் (விளரியின்) நட்பின்பின் என, அதே நரம்பைக் குறிப்பிடுவதும் கூறியது கூறல் ஆகுமே எனின்; இங்கு அவ்வாறு கொள்ளுதல் பொருந்தாதாகும். கிளை நரம்புகள் எவை என அடியார்க்கு நல்லார் காட்டிய மேற்கோளின்படி, குரல், துத்தம், கைக்கிளை, இளி, விளரி என்னும் ஐந்துள் ஏதேனும் ஒன்று கிளையாகலாம். இவற்றுள் துத்தத்திற்குமுன் இருக்கும் குரலும் கிளை எனப்படும்; அதன்பின் இருக்கும் கைக்கிளையும் கிளை எனப்படும். ஆதலின், அடிகள் குறிப்பது எதை எனக் காட்டவே, "அவள் (விளரியின்) நட்பின்பின்" எனக் கைக்கிளையைச் சுட்டிக்கூறுதல் நேர்ந்தது.

இங்குக் கூறிய புத்துரையாகிய இருவகை உரைகளில், எதைத் தக்கதெனக்கொண்டாலும், இளங்கோவடிகளின் பாட்டு, இசை இலக்கணம், இயல் இலக்கணம், கூத்திலக்கணம் என்னும் முத்தமிழ் இலக்கணத்திற்கும் பொருந்த, அடியார்க்கு நல்லார் கண்ட "பழுதற்ற முத்தமிழ்" என மிளர்கின்றது. முல்லைத் தீம்பாணி, தித்திக்கும் முல்லைப்பண் என்பது ஏழு நரம்புகள் இயன்ற பண் அன்று, ஐந்து நரம்புகள் இயன்ற பண்ணே என்னும் முடிவு ஏற்படுகின்றது. அப் பண்ணில் இயன்றவை குரல், துத்தம், கைக்கிளை, இளி, விளரி என்னும் ஐந்து நரம்புகளே என்னும் முடிவையும் பெறுகிறோம்.

(தொடரும்)

---

# மொழியியலும் செந்தமிழும்

[மைக்கல் பிரான்சிசு, எம். ஏ., பி. எஸ்சி.,]

பேச்சுத் தமிழ் எழுத்துத் தமிழினின்றும் பெரிதும் வேறுபடுவதாகும். தமிழர் பேசும் வண்ணம் எழுதுவதில்லை; எழுதும் வண்ணமே பேசுவதில்லை. "பேசுவது போலவே எழுத வேண்டும்" என்பதைத் தமிழர் பொருந்தாக் கூற்று என ஒதுக்குவர். நெருங்கிய உறவினரோடு உரையாடுங்கால் ஒரு வித மொழி, உற்ற நண்பரோடு அளவளாவுங்கால் ஒருவித மொழி, ஆருயிர்க் குழந்தைகளோடு கொஞ்சிப் பேசுங்கால் ஒரு வித மொழி எனத் தமிழர் பேச்சுத் தமிழை மாற்றிப் பேசுவர். ஆயின், ஏடெடுத்து எழுதும்போது, யாவரும் எச்சூழலிலும் ஒரே தன்மையான இலக்கியத் தமிழையே எழுதுவர். இத்தகைய பேச்சுமொழி—எழுத்துமொழி வேறுபாடு தமிழுக்கு மட்டுமே சிறப்பானதன்று. இது எல்லா மொழிகளிலும் காணப்படும் ஒரு கூறு. இலண்டன் மாநகரத்தில் வெளியிடப்படும் நூல் ஒன்றில் காணக்கிடக்கும் ஆங்கிலம் வேறு, அதே நகரில் வண்டி ஓட்டும் வலவன் பேசும் ஆங்கிலம் வேறு. எனினும், ஆங்கில நாட்டின் நிலைக்கும் தமிழ்நாட்டின் நிலைக்கும் பெரியதொரு வேறுபாடு உண்டு. அந் நாட்டில், "வண்டிக்காரன் மொழியிலேயே நூல் எழுதப்பெற வேண்டும்" எனக் கூற எவரும் துணியார். இந்நாட்டிலோ "பேசுவதுபோல் எழுதவேண்டும்" எனக் கூறுவது 'பரந்த' மனப்பான்மையைக் காட்டும் என ஓரோவழி கருதப்பெறுகிறது. இதனால், இலக்கியத் தமிழின் தூய்மையையும், என்றும் மாறாச் சீரிளமையையும் ஓதியுணர்ந்த நற்றமிழர் பேச்சு மொழியையும் இலக்கியமொழியையும் குழப்ப முன்வருவோரிடம் எச்சரிக்கையாக இருக்கத் தலைப்பட்டுளர். மற்றும் பேச்சுமொழியைப் போற்றுவோரைக் கண்டு அஞ்சவும் அஞ்சுகின்றனர். இந்தச் சூழலிலே நம் நாட்டில் வந்திறங்கிப் பரவத்தொடங்கியுள்ளது "மொழியியல்"[1] என்ற மொழியாராய்ச்சி முறை.

மொழியியல் மொழியின் தன்மையை, அமைப்பை, அது கருத்தை உணர்த்தும் கருவியாய் அமையும் பாங்கினை, ஆராயும் அறிவியல் முறை. இது இலக்கியமொழியையும் ஆராய்கிறது; பேச்சுமொழியையும் ஆராய்கிறது. இலக்கியமொழி கற்றோரால் போற்றப்பட்டு மாறாமல் காக்கப்படும் மொழியாதலின், இது இடத்துக்கு இடம், காலத்துக்குக் காலம் அவ்வளவு அதிகமாக மாறுபட்டுப் பலதிறப்படுவதில்லை. இதற்கு மாறாக, பேச்சு

1. Linguistics.

மொழி மாந்தரின் பல்வேறுபட்ட உணர்ச்சிகளையும் கருத்துக் களையும் வெளிப்படுத்தும் கருவியாய் நொடிக்கு நொடி பயன் படுகிறது. இடத்திற்கேற்ப, காலத்திற்கேற்ப, பேசுவோரின் மனநிலைக்கேற்ப, மாறுகிறது. கருத்தை வெளிப்படுத்தும் கருவியாகப் பேச்சுமொழி இடையறாது எல்லா மக்களாலும் ஆளப்படுகிறது. இதனால் மொழியியல் பேச்சுமொழியை விட்டு விடாமல் அதனைப் பெரிதும் போற்றுகின்றது.

இதனைக் கூறும்போதே, நம் இலக்கண ஆசிரியர்—தொல் காப்பியர் முதல் வீரமாமுனிவர் வரை—இலக்கிய மொழிக்கே பெரும்பான்மையும் இலக்கணம் வகுத்து வந்துள்ளனர் என்பதையும் கூறவேண்டும்.[1] வீரமாமுனிவரே முதன் முதலாகப் பேச்சுத்தமிழுக்குக் கொடுந்தமிழ் இலக்கணம் என்ற இலக்கண நூலொன்றை யாப்பாராயினர். இதனால், முறைப்படி இலக்கணம் கற்றவர் மொழியியல் பேச்சுமொழியைப் போற்றுவதைக் கண்டு திகைத்தல் இயற்கையே. ஆயினும், வீரமாமுனிவரது கொடுந்தமிழ் இலக்கணத்தைக் கண்டு மலைக்காத தமிழறிஞர், மொழியியல் பேச்சுத்தமிழுக்கு இலக்கணம் வகுக்க முன் வருவதைக்கண்டு ஏக்கம்கொள்ளக் காரணம் ஏதேனுமுண்டோ?

பேச்சுத்தமிழுக்கு இலக்கணம் தோன்றுவதால், இலக்கியத் தமிழுக்கோ அல்லது தமிழ்மொழியின் பண்டைய இலக்கண நூல்களுக்கோ யாதொரு குறைபாடும் நேரப்போவதில்லை என்பது தெளிவு. இருந்தாலும், சில மொழியியல் ஆய்வாளர் போக்கு தண்டமிழாசிரியர் பலருக்கும் கலக்கம் விளைக்கும் விதத்தில் அமையலாம். இக் கலக்கம் விளையாமல் காக்க, செந்தமிழன்பர்கள் மொழியியலின் நோக்கத்தை நன்குணர வேண்டும்; மொழியியல் ஆய்வாளரும் அறிவியல் முறைக்கு ஒவ்வாத போக்கில் போதல்கூடாது.

மொழிகளின் ஒலிகள், வாக்கிய அமைப்புகள், காலப் போக்கில் அவை உருவாகும் முறை, மொழிகளுக்கிடையே உள்ள உறவு ஆகிய இவற்றையெல்லாம் அறிவியல் முறைப்படி ஆராய்வதே மொழியியலின் குறிக்கோள். ஆகவே, உள்ளதை உள்ளவாறு ஆய்ந்து, தெளிந்து, முறைப்படுத்திக் கூறுவதே மொழியியல் ஆய்வாளரின் பணி. பல மொழிகளில் ஒலியியல் முறை இவ்வாறு இருப்பதால், எல்லா மொழிகளிலும் இந்த முறையே இருந்தாகவேண்டும் எனக் கூறத்துணியார் உண்மை

1. **தொல்காப்பியம்** முதலாய தமிழ் இலக்கண நூல்கள் மொழிக்கு மட்டும் இலக்கணம் வகுப்பவை அல்ல; சிறப்பாகப் பொரு ளதிகாரத்தால் வாழ்க்கைக்கே இலக்கணம் வகுப்பவை என்பதை நாம் மறந்துவிடலாகாது.

ஆய்வாளர். இன்னும், மொழிவளர்ச்சி இன்னின்னவாறு இருத்தலால், இம்மொழி இன்னின்ன மாற்றங்களை மேற்கொள்ளவேண்டும் என வலியுறுத்த அவர் துணியவே துணியார். சுருங்கச் சொல்லின், "இவ்வாறு இருக்கிறது" என ஆராய்ந்து கூறுதல் மொழியியல் ஆய்வாளர் கடமை; "இவ்வாறு இருக்க வேண்டும்" என்று பணித்தல் அவர் உரிமை அன்று. "அறிவியல் வல்லுநன் என்ற முறையில் மொழியியல் ஆய்வாளன் பயன்கருதாத அறிவையே நாடுகிறான். உண்மைகளை அறிதலும், மொழி இயக்கங்களை உணர்தலுமே அவனுடைய முடிவான குறிக்கோள்கள்" என்கிறார் பேராசிரியர் ஃபிரீசு.[1]

இதனால், இலக்கியத் தமிழையும், கல்வெட்டுத் தமிழையும், பேச்சுத்தமிழையும் ஆராய்ந்து முறைப்படுத்தி, தமிழ்மொழியின் பல்வேறு பண்புகளைக் கூறுதல் வரவேற்கத்தக்கதே. கன்னடத்தோடும், தெலுங்கோடும், மலையாளத்தோடும் தமிழ் கொண்டுள்ள உறவு யாது, இன்னும் தொதவர் மொழிக்கும் கோத்தர் மொழிக்கும் தமிழ்மொழிக்கும் உள்ள தொடர்பு யாது என எடுத்து மொழிதலும் வரவேற்கத்தக்கதே. மற்றும், இலக்கியத் தமிழில் ழகரமாக ஒலிக்கப்பெறுவது, வட ஆற்காட்டுப் பேச்சுத் தமிழில் யகரமாகவும், திருநெல்வேலிப் பேச்சுத்தமிழில் ளகரமாகவும் ஒலிக்கப்பெறுகிறது எனக் கண்டறிந்து கூறுதலும் வரவேற்கத்தக்கதே. ஆயின், "இலக்கியத் தமிழில் வழங்கும் ழகரம், கல்வெட்டில் ளகரமாகச் சில இடங்களில் பொறிக்கப் பட்டிருக்கிறதே; கன்னடத்திலும் ளகரமாகிவிட்டதே; திருநெல்வேலி மாவட்டப் பேச்சிலும் ளகரமாகிவிட்டதே; இந்த ழகரம் நிலைபெறாது அற்றது என்பது இதனின்றும் விளங்குகின்றது அன்றோ? அதனால் இலக்கியத் தமிழினின்றும் ழகரம் வீழும் என்பது உறுதி. எனவே, முற்போக்காளர்களாக நாம் தமிழினின்றும் ழகரத்தை நீக்கிவிடுவோம். லகர ளகர ழகர வேறுபாடுகள் இருபதாம் நூற்றாண்டில் தேவையானவை அல்ல" எனக் கூறுவதைத் தமிழர் எங்ஙனம் வரவேற்பர்? இக் கூற்று மொழியியலின் நோக்கத்துக்கு முற்றிலும் மாறானது. எங்கெங்கு ழகரம் வழங்குகிறது, எங்கெங்கு அது ளகரமாகத் திரிந்திருக்கிறது என்பதைக் கூறுவதோடு மொழியியல் ஆய்வாளன் அமையவேண்டும். "ழகரம் நீங்கியுள்ளது" எனக் கூறுதலே அன்றி, "ழகரத்தை நீக்கவேண்டும்" எனக் கூறுதல் மொழியியல் ஆய்வாளன் பணி அன்று. "இருபதாம் நூற்

1. "As a scientist the linguist is searching for pure knowledge. To know the facts and to understand the language processes are to him ends in themselves." CHARLES C. FRIES, *The Structure of English*, NEW YORK, 1952. p. 4.

றூண்டில் இது நாகரிகமானது ; இது பிற்போக்கானது" எனக் கூறுவது அறிவியல் வல்லுநனுக்கு அழகாகாது.

திருநெல்வேலி மாவட்டத்தார் ஒருவர் பேசுங்கால் 'பளம்' எனலாம். ஆயின், அவர் 'பளம்' என ஏட்டில் எழுதுவ தில்லையே! மேடையேறிச் சொற்பொழிவாற்றுகையிலும் தம் நாவைச் சரியாக இயக்க இயலாதவராய் ளகரத்தோடு 'பளம்' என்றாலும், அதைக்கேட்ட ஒருவர் 'பளம்' என எழுதிக்காட்டி, "இதுதானே நீர் சொன்னது?" என வினவினால், சொற்பொழி வாளர் உடனே வன்மையாக மறுத்து, "இல்லை, இல்லை ; நான் கூறியது இது" என்று 'பழம்' என எழுதிக்காட்டுவார் என்பது திண்ணம். இந்த நிலையில், "தமிழில் ழகரம் நிலைபேறு அற்றது" எனல் எந்த அறிவியல் முறையைச் சேர்ந்தது?

இதேபோல், "பழைய இலத்தீன் மொழி நீண்ட நீண்ட வாக்கியங்களில் எழுதப்பட்டு வந்தது. இன்றைய ஆங்கிலமோ சிறு சிறு வாக்கியங்களில் எழுதப்படுகிறது. இருபதாம் நூற் றூண்டுத் தமிழும் சிறு வாக்கியங்களிலே பெரும்பான்மையும் எழுதப்பட்டு வருகிறது" என்றெல்லாம் கூறுதல் மொழியியல் ஆகும். ஆயின், "சிறு சிறு வாக்கியங்களைக் கையாளாவிடில் தமிழ் அழிவது உறுதி" எனக் கூறுவது மொழியியலுக்குப் புறம்பானதாகும். சிறு வாக்கியங்களைப் பயன்படுத்தும் வழக் கத்தைப் போற்றி வளர்ப்பது தக்க முறையில் சந்திபிரித்து எழுதுவதை ஆதரிப்பது, தனித்தமிழ்ச் சொற்களைக் கையாளு வதைப் புகழ்வது ஆகிய காரியங்களைச் செய்வதால், தனித் தமிழ்ச் சொற்கள் சந்திபிரித்து எழுதப்பட்டுச் சிறு வாக்கியங் களில் அமைந்து மிளிரும் இனிய தமிழ்நடை உருவாகுமாறு செய்யலாம். இதைச் சிலர் செய்யவேண்டும். ஆயின், இதனைச் செய்யவேண்டுபவன் மொழியியல் ஆய்வாளன் அல்லன். இப்பணி இலக்கியத்திறனாய்வாளனைச்[1] சார்ந்ததாகும். நல்லதைப் போற்றி, அல்லதைக் குறைகூறும் உரிமை இலக்கியத் திறனாய்வாளனுக்கு உண்டு. மொழியியல் ஆய்வாளனுக்கோ 'நல்லது, அல்லது' என்ற பாகுபாடு இல்லை ; 'உள்ளது, இல்லாதது' என்ற பாகுபாடே அவனுடையது.

இனி, தமிழர் விரும்பாத ஒன்று தமிழ்மொழியில் இருந் தால், அதைச் சுட்டவும் மொழியியல் ஆய்வாளன் தயங்கக் கூடாது. 'ஜலம்' என்ற சொல் தமிழில் குறிப்பிட்ட சிலருடைய பேச்சிலும் எழுத்திலும் வழங்குகிறது என்பதை மொழியியல் ஆய்வாளன் அஞ்சாமல் எடுத்துக் கூறவேண்டும். "'ஜலம்'

---

1. Literary Critic.

என்ற சொல்லைக் கையாளும் மொழியும் தமிழா?" என வினு எழுப்பி, ஏளனம் செய்யும் உரிமை இலக்கியத் திறனாய்வாளனுக்கு உண்டு ; மொழியியல் ஆய்வாளனுக்கு இல்லை.

இதுகாறும் கூறியவற்றால், தமிழ்மொழியை அறிவியல் கண்கொண்டு நோக்கி, அதன் தன்மையை, அமைப்பை, முறைப்படுத்தி எடுத்துக்கூறுபவன் மொழியியல் அறிஞன் என்பது போதரும். தமிழகத்தில் கொடுந்தமிழ் வழங்கியதை உணர்ந்து, அதைத் தம் இலக்கணங்களில் குறித்துச் சென்றனர் பழந்தமிழர். மொழியியல் ஆய்வாளனும் கொடுந்தமிழை ஆராய்கிறான்; செந்தமிழையும் ஆராய்கிறான். கொடுந்தமிழை ஆராய்வதினாலோ, அன்றி அதற்கு இலக்கணம் வகுத்தலாலோ, அவன் செந்தமிழின் எதிரியாகமாட்டான். அவன் செந்தமிழின் எதிரியாவது, "செந்தமிழ் தேவையில்லை", "செந்தமிழ் வாழாது" எனக் கூறும்போதுதான். இங்ஙனம் கூறுங்கால், அவன் செந்தமிழின் எதிரிமட்டுமன்று, தமிழுக்கே எதிரியாவான். மற்றும் அறிவியலுக்கு ஒவ்வாத முறையில் இவ்வாறு பேசுபவன் உண்மையான மொழியியல் ஆய்வாளனுமல்லன் என்பது மேலே காட்டப்பட்டது. எனவே, மொழியியல் ஆராய்ச்சி நம் நாட்டில் பரவுவதால் செந்தமிழுக்கு ஊறுமிகழாது. மாறாக, செந்தமிழ் வளம் பெறும். மேனாட்டு அறிவியல் முறைப்படி ஆராய்வதால் இன்றமிழ் நலியாது. மறைந்துகிடக்கும் அதன் புதுப் பொலிவுகள் இதனால் வெளிப்படும். தமிழை அழித்தே தீரவேண்டுமெனக் காழ்ப்புக்கொண்டு மறைவாகச் சூழ்ச்சி செய்வோர் தீவினையையும் வென்று, தன் சீரிளமை குன்றாது வாழும் தமிழ், கருவிகொண்டும் கணிதநூல் துணைகொண்டும் ஆற்றப்படும் ஆராய்ச்சியால் நலிவுறும் என அஞ்சுவது பேதைமை ஆகும். வடமொழி அமைப்பைத் தமிழ்மேல் திணித்து இலக்கணம் வகுக்கும் முறையை வரவேற்றுக்கொண்டு, அறிவியல் துணையால் தமிழுக்கே உரிய இலக்கணம் வகுக்கும் முறையை விரட்டல் வள்ளுவப் பெருந்தகை கூறிய பேதைமையே ஆகும்.

"பேதைமை என்பதொன்று யாதெனின் ஏதங்கொண்டு
ஊதியம் போக விடல்" (குறள் : 831)

என்பது குறள் அன்றோ? ஆகவே, மொழியியல் தமிழுக்கு வேண்டப்படுவதாகும். ஆயின், மொழியியலின் புதுமையில் மயங்கிப் பொருந்தாதன கூறுவோர் சொற்களுக்குத் தமிழகம் செவிமடுக்கத் தேவையில்லை. உண்மையான மொழியியலை வரவேற்றால் போதும். அங்ஙனம் வரவேற்பின், தமிழகத்தில் மொழியியலும் மேன்மையுறும், செந்தமிழும் செழிக்கும்.

---

# நற்றிணையிலே நம் வள்ளுவர்

[மது. ச. விமலானந்தம் பி. ஏ.]

**தமிழ்மறையின் தனி மாண்பு:**

மறைந்தார் வள்ளுவர். எனினும் மறையொன்று தந்து சென்றார். அன்று அவர் தந்த மறை இன்று அவனியிலே பவனி வருவதனைக் காண்கின்றோம். தென்மொழியிலே அவர் தந்த மறை பன்மொழியாளர்க்கும் பயன்படுவதனைப் பார்க்கின்றோம். இந்நாட்டவர்க்குரிய மறை எந்நாட்டவர்க்கும் உரியதாகின்றது. ஈராயிரம் ஆண்டுகட்கு முன்தோன்றிய மறை இன்றும் என்றும் யாவரும் போற்றும் தகைமையதாகின்றது. பண்டைத் தமிழர் பண்பாட்டின் விளக்கமாகத் திகழும் இம் முப்பாலை எப்பாலரும் ஏற்றிப் போற்றினர். போற்றுகின்றனர். போற்றுவர். பண்டு தொட்டே இதன் சொல்லையும் பொருளையும், பாவலரும் காவலரும் பொன்னேபோற் போற்றுவர் சிறப்பும் சீர்மையும் உடைய இந்நூல் நவில்தொறும் நயம் பல நல்குவது.

**வழிவழி வள்ளுவர்:**

இத்தகைய தலையாய நிலையாய உலையாத ஊற்றிலே ஊறித் திளைத்து இன்பம் பெற்றார் பலர். பாவலர் பலர் தமது பாக்களினிடையே வைத்து வளம்பெற்றனர். வான்புகழ் எய்தினர். குறள் தோன்றிய காலந்தொட்டு தமிழ் இலக்கியம் பெரும்பாலும் குறள்வழியே சென்று கொண்டிருப்பதனைச் செந்தமிழ் பயின்றோர் அனைவருமறிவர். இங்ஙனம் வழிவழியாக வள்ளுவரைப் பொன்னேபோல் போற்றியவர்களிலே நற்றிணையிலே நாம் காணும் நற்றமிழ்ப் புலவரும் சிலராவர்.

**அழகுக்கு அழகு:**

குறளிலேயே ஒரு தனி அழகு உண்டு. இத்தகைய சொல்லழகும் பொருளழகும் மிக்க குறள்மணிகளைச் சொல்லேருழவர்கள் தங்கள் கவிதைகளிலே அமைத்து அகமகிழ்ந்தனர். அவர்கள் எடுத்தாள்வதில்தான் எத்தனை அழகு! எத்தனை அருமைப்பாடு! வைரத்தின் ஒளியை நாமறிவோம், ஒளிவீசும் வைரத்தை ஒரு தங்கத்தட்டிலே பதித்துவிட்டால்........! அதன் ஏற்றத்தையும் இனிய தோற்றத்தையும் சொல்லவும் வேண்டுமோ? இங்ஙனமே அழகும் அருமையும் வாய்ந்த குறளை, அருந்தமிழ்ப்புலவோர் அள்ளி எடுத்துத் தெள்ளுதமிழ்ப் பாக்களிலே வைத்து அழகுக்கு அழகு செய்வதாகும் இது, திருவமைந்த

மாநகரத்திற்கு உருவமைந்த வாயின்மாடம்போல—அணியிழை மகளிர்க்கு அவ் வணியிற் சிறந்த ஆடைபோல, தனியழகும் தனி நயமும் தந்து நிற்பதாகும்.

**நற்றிணையிலே......நாயனர் :**

நற்றிணை நானூறு பாடல்களில், நல்லிசைப் புலவர் சிலர் நல்ல சில இடங்களிலே நயம்படக் குறளடிகளேயன்றிக் குறளேயும் அமைத்து அழகு செய்த திறம் வியந்து செயல்மறந்து பாராட்டற்பாலது. வள்ளுவரைக் காண்பதே நமக்குப் பெருமை. அதிலும் நல்திணையாம் நற்றிணையிலே நமது வள்ளுவரைக் காண்பதிலோ பெருமையிலும் பெருமை. இம் முயற்சியிலே இன்பமுண்டு இனிமையுமுண்டு.

**நீரும் நேர்மையும் :**

வான் சிறப்பினை விளக்குகின்றார் வள்ளுவர். விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்து உள்நின்று உடற்றுமாம் பசி. விசும்பினின்று துளி வீழின் அல்லால் மற்று ஆங்கே பசும்புல் கூட தலையெடுத்தல் அரியதாகும். மழையின்றேல் மண்ணுல கில்லை. எனவேதான் மாண்புமிக்க மழையை அமிழ்தம் என்றழைத்தார். எத்தகையோர்க்கும் நீரில்லையேல் நிலவாழ்வு அமையாதெனின் மழையில்லையேல் ஒழுக்கமில்லாது ஒழியும் என்றார் வள்ளுவர்.

"நீர்இன்று அமையாது உலகெனின் யார்யார்க்கும்
வான்இன்று அமையாது ஒழுக்கு." (குறள் - ௨0)

இக் குறளடியையே தனது பாடலில் எடுத்தாள்கின்றார் புலனழுக்கற்ற அந்தணாளன் எனப் புலவர் போற்றும் பொய்யில் கபிலர். தலைவன் பிரியக் கருதினன். அறிந்த தோழி அன்புத் தலைவிக்கு அறிவிக்கலானாள். ஆனால் தலைவி, "நம் காதலர் நின்ற சொல்லர். நீடுதோன்றினியர். என்றும் என் தோள் தனைப் பிரிதலறியாதவர். அத்தகைய பண்பினர் ; நீரில்லாது தான் நிலைபெறுதலில்லா உலகம்போலத் தம்மையின்றி அமையாத நம்மைவிட்டுப் பிரியார். அன்றியும் முன்பு அன்பு காட்டிப் பின்பு பிரியின் நம் நறிய நுதல் பசலையுறுமென்று அஞ்சி அத்தகைய சிறுமையேதும் செய்யார்காண்" என்று தலைவன் தன்மையும் அவனின்றித் தானில்லாத் தகைமையும் தோன்றக் கூறினள். எங்ஙனம் நீர் இன்றி உலகம் நிலை பெறுதலைச் செய்யாதோ, அங்ஙனமே தலைவன் இன்றித் தலைவி யில்லை என்ற நிலையினை விளக்கும் ஒப்பில் கபிலரின் தப்பில் கவியிலேதான் குறள் எத்தனை விளக்கமும் துலக்கமும் பெறு கின்றது. இதோ கவி :

" நீரின் றமையா வுலகம் போலத்
தம்மின் றமையா நந்நயந் தருளி
நறுநுதல் பசத்த லஞ்சி
சிறுமை உறுபவோ செய்பறி யலரே." (நற்றிணை - க)

அன்பும் அறிவும் :

தலைவியை நாடிப் பன்னாள் வந்து ஆடிப்பாடி இரந்து பின்னின்றான் தலைவன். ஏறிட்டுப் பார்த்தாளில்லை தலைவி. அழகும் ஆண்மையும் மிக்க தலைவன் தயங்கி மயங்கி நிற்கும் நிலைகண்டாள் தோழி. அவன்மாட்டு இரக்கங்கொண்டாள். கண்ணுக்கினிய தலைவி தண்ணளி செய்யாதிருத்தலைக் கண்டு, அவளிடத்துச் சினமும் கொண்டாள். தலைவன் பொருட்டு வாதாடவும் செய்தாள். செவிசாய்த்தாளில்லை தலைவி. எனவே சிறிது கடுமையாகவே " தோழி! தலைவன் நாள்தவறாது தினைப் புனத்தருகே நின்று நம்மை நயந்து வருந்தி இருக்கின்றான் என்று பன்முறை கூறியும் பதிலுரைத்தாயில்லை. என் சொல் கேளாவிடினும், நின்மாட்டு அன்புடைய தோழியரோடு கூடிக் கலந்து இது தகும் இது தகாது என நும்மறிவுகொண்டு ஆய்ந்து தெளிந்து அளவளாவுவாயாக. அவனன்பு அவ்வளவெளிதில் மறுத்தற்பாலதன்று. அன்றியும் நம்மை மறந்தாரை நாம் மறக்கமாட்டாத சிறந்த குடியில் பிறந்தவரன்றோ நாம்! அறிவுடையோர், தம்மை நயந்தாரின் குணம்நாடி குற்றமும் நாடி மிகுதிகண்டு நட்புக்கொண் டொழுகுவாரே யன்றி, நட்புச் செய்த பின் ஆராய்தலைச் செய்யார்காண். ஆனால் நீயோ, அங்ஙனம் செய்தாயல்லை. அன்று நட்புக்கொண்டு இன்று வெறுத்தலைச் செய்கின்றாய். இது தகாது" என்றாள் தோழி. இதோ பாடல் :

" அம்மலை கிழவோன் நந்நயந் தென்றும்
வருந்தின னென்பதோர் வாய்ச்சொல் தேறாய்
நீயுங் கண்டு நுமரொடும் எண்ணி
அறிவறிந் தளவல் வேண்டு மறுதரற்கு
அரிய வாழி தோழி! பெரியோர்
நாடி நட்பி னல்லது
நட்டு நாடார்தம் ஒட்டியோர் திறத்தே." (நற்றிணை - ௩௨)

தோழி குறைநயப்புக் கூறுமுகமாக குறளையே எடுத்தாள்கின்றான் குறிஞ்சிக்கு ஒருவனும் கபிலன். இதன்கண் தனி விளக்கமும் தலையாய அழகும் உலையாத உயர்வும் பெறும் ஒப்பற்ற குறள் இதோ :

" நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு." (குறள் - ௭௯௧)

அறிந்து அளவளாதல் வேண்டும். அளவளாவிப் பின் அறிவுகொண்டு ஆய்தல் கூடாது. ஆராயாது அன்புகொள்ளல் அழிவைத்தரும். அன்பு கொண்டு பின் ஆராய்தல் பழியே தரும்.

நஞ்சும் நெஞ்சும் :

தோழி, தலைவியைத் தெருட்டியமையிலே அமைந்த அருந் திருக்குறள் ஒன்றன் உயர்வைக் கண்டோம். இப்போது தோழி தலைவனைத் தேற்றும் மொழியிலே தோற்றும் ஏற்றமிகு குறளையும் எழில்மிகு விளக்கத்தையும் காண்போம். கண்ணோட்டம் வேண்டுமென்பது வள்ளுவர் வகுத்த நெறி. கண்ணோட்டமில்லாதவர்கள் கண்ணிருந்தும் இல்லாதவரே. கண்ணோட்டமிக்க தக்கோன், தனக்கு நஞ்சே கொடுக்கப்படினும், கேடு எண்ணிக் கொடுத்தோர் நெஞ்சம் அஞ்சுதலோ துஞ்சுதலோ கூடாது என்று அந் நஞ்சையும் உண்ணும் நெஞ்சமுடையராதல் வேண்டும். அவரே நாகரிகமிக்க நல்லவர்.

"பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்." (குறள் - ௫அ௦)

இக் குறளைப் பொன்னேபோற் போற்றுகின்றார் ஏற்றமிகு இன்தமிழ்ப் புலவர் ஒருவர். களவின்கண் புணர்ந்து செல்லும் தலைவனது கருத்து வேறுபாட்டையும் காதல் மாறுபாட்டையும் கண்ணுற்ற தோழி, "மாமலை நாட! நட்பாளர், இதனை உண்க என நஞ்சு கலந்துகொடுப்பினும் நட்பின் மிக்க கண்ணோட்டமுடையார், அதனை நஞ்செனை நன்கறியினும் கண்மறுக்க மாட்டாமையால் அதனையும் உண்பர் உண்பதோடமையாது உறவாடவும் செய்வர் அத்தகைய திட்பமான நட்பாளனாகிய நீ, நட்பின் எல்லையிலே நிற்பினும் அழகிய சிலவாய கூந்தலையுடைய என் தோழியின் (தலைவியின்) தோளில் துயில்வதனை இன்பமாகக் கொள்கின்றாயல்லை உள்ளுற வெறுப்பினும் என்மாட்டுடைய நின் கண்ணோட்டத்தினாலாவது காதலாளின் கருத்த பருத்த தோளில் துயில்வதைச் செய்வாயாக என வேண்டும்,

"செம்முக மந்தி ஆரும் நாட!
முந்தை இருந்து நட்டோர் கொடுப்பினும்
நஞ்சும் உண்பர் நனிநா கரிகர்
அஞ்சில் ஓதியென் தோழி தோள்துயில்
நெஞ்சின் இன்புறாய் ஆயினும் அதுநீ
என்கண் ஓடி அளிமதி
நின்கண் அல்லது பிறிதியாவது இலளே. (நற்றிணை - ௩௫௫)

இப் பாடலிலே எப்பாலவரும் ஏற்றிப் போற்றும் இனிய குற ளொன்று குரல் கொடுக்கும் முறையும் நிறையும் கண்டு தெளியும் நமக்கு 'நஞ்சுமுண்பர்,' 'நனிநாகரிகர்,' 'கண்ணோடு' என்ற சொல்லும் பொருளும் அருமையான ஒரு குறளை— பண்டைத் தமிழரின் நாகரீகத்தின் எல்லையைக் காட்டும் நல்ல குறளை—நம் மனக்கண்முன் கொண்டுவந்து நிறுத்துகின்றது. அக் குறள் எதுவோ? எதுவாகுலென்ன இதோ: பெயக் கண்டும் நஞ்சுண்டமைவர் நயத்தக்க, நாகரிகம் வேண்டுபவர். இதனை எடுத்துக் காட்டும்போது ஏதொரு அழகும் காணாது. இரண்டனையும் எண்ணி இரண்டனது இன்பப் பிணைப்பையும் இணைப்பையும் உன்னித் தெளியும்போதுதான் உணர்ச்சி பொங்கும் உவகை தங்கும். அழகு விளங்கும். ஆழம் துலங்கும்.

**மட்கலம்போல் மனம்:**

எயினந்தை மகன் இளங்கீரனார் எடுத்தாள்கின்றார் ஓர் இனிய குறளை. பொருள் திரட்டிவர எண்ணினான் தலைவன். தலைவியை நண்ணித் தனது கருத்தையும் தெரிவித்தான். உணர்ந்த தலைவி, ஊடினாள்—கண்ணீர் வடித்தாள்—துடித்தாள். எடுத்து மொழியவும் இயலாது, தடுத்து நிறுத்தவும் ஆற்றாது தயங்கி மயங்கித் தலைவன்மேற் சாய்ந்தாள். தலைவன் நிலை தளர்ந்தான். தலைவியின் நீண்ட தோளும் நெகிழ்ந்த நெஞ்சும் தெளிந்தான். பொருள் தேடும் எண்ணமும் அழிந்து ஒழிந் ததனை யறிந்தான். தலைவியை விட்டு எட்டச்செல்லுதல் ஒல்லாது என உணர்ந்தான். இதனை நல்லிசைப் புலவர் சொல் லோவியமாகத் தீட்டினார் ஏட்டிலே தீட்டிய நல்லோவியம் இதோ:

"செலவிரை வுற்ற அரவம் போற்றி
மலரேர் உண்கண் பனிவர ஆயிழை
யாம்தற் கரையவும் நாணினள் வருவோள்
வேண்டா மையின் மென்மெல வந்து
வினவலுந் தகைத்தலுஞ் செல்லா ளாகி
வெறிகமழ் துறுமுடி தயங்க நல்வினைப்
பொறியழி பாவையிற் கலங்கி நெடிதுநினைந்து
ஆகம் அடைதந் தோளே, அதுகண்டு
ஈர்மண் செய்கை நீர்படு பசுங்கலம்
பெருமழைப் பெயற்கேற் றங்கேம்
பொருண்மலி நெஞ்சம் புணர்ந்துவந் தன்றே."

(நற்றிணை - ௩௨௮)

இதன்கண் தோன்றும் கருத்தும் சொல்லும் அமைந்த அந்தக் குறள்:

"சலத்தால் பொருள்செய்தே மார்த்தல் பசுமட்
கலத்துள்நீர் பெய்திரீஇ யற்று." (குறள் - ௬௦௦)

என்பதாகும். கருத்து: வஞ்சனையால் பொருளைச் சேர்த்துக் காப்பாற்றுதல், பச்சை மண்கலத்துள் நீரைவிட்டு அதைக் காத்தல் போன்றதாம். தலையாய நிலையாய நெறிதனை விடுத்துத் தவறான வழிச் சென்று பொருள் தேடுவது பசுமட்கலத்தில் நீரைப் பெய்து காப்பதனை ஒப்பதாகும். தலைவியை விடுத்து தலைவன் பொருள்தேட முற்படுவது சுடப்படாத மட்கலத்தில் மழைநீர் பெய்தலைப் பாதுகாப்பது போன்றது இவ் விருமையில் தான் எத்தனை ஒருமை. அவ்வொருமையிலேதான் அத்தனை அருமையும் பெருமையும். சுடப்படாத மட்பாண்டம், மழை நீரை, ஏந்தவைத்தலால் கரைந்து ஒழியுமாறுபோல, தலைவன் நெஞ்சமும் தலைவியின் கண்ணீராலும் கவலையாலும் அழிந்து ஒழிந்தது என்கின்றார் இளங்கீரனார்.

இதுகாறும் நான்கு குறள்மணிகள் நற்றிணையில் பெறும் விளக்கம் கண்டோம். இதுபோன்றே "வழிவழி வள்ளுவரை"க் கண்டு, குறள்வழி நின்று, வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வள்ளுவர் வழிசிறக்க உள்ளம் கொள்வோமாக

---

## இலக்கியம்

[நாகை - வேலன்]

இலக்கியம் என்பது யாது? அஃது எங்ஙனம் அமைதல் வேண்டும்? படித்துச் சுவை காண்பது மட்டுந்தான் இலக்கியச் சுவையின் இலக்கணமா? இலக்கியம் ஏட்டளவோடு இருந்தால் போதுமா? நாட்டளவில் நடைமுறையில் அஃது எங்ஙனம் பயன்படுதல் வேண்டும்? என்பன போன்ற ஐயப்பாடுகள், சிந்திக்கும் எவர்க்கும் எழுதல் இயல்பு.

இத்தகைய ஐயப்பாடுகளை அகற்றும் முறையிலே திருமதி ஸ்டோவ் என்னும் மேனாட்டு ஆசிரியை ஒருவர், இலக்கியத்தின் அடிப்படையை அழகுற—சுருக்கமாக விளக்குகிறார். அது வருமாறு:

"ஒரு நாட்டு மக்களின் இலக்கியம் அந்த மக்களின் இனப் பற்றிலிருந்து எழுதல் வேண்டும் தம் இனம் விடுதலை வாழ்வைப் பெறவேண்டும் என்ற உணர்ச்சி மக்களுக்குத் தேவை. அவ்வுணர்ச்சி யின்றேல் தன்மான உணர்வு தோன்றாது. தன்மான உணர்வு இன்றேல் இன உணர்வும் தோன்றாது."

—திருமதி ஸ்டோவ்.

---

# தமிழ்விடுதூது முகவுரை

[மறைத்திரு மறைமலையடிகளார்]

(செல்வி, சிலம்பு - ௩௨, பரல் எ, ௩௨௨ - ஆம் பக்கத் தொடர்ச்சி)

இனி 129-வது வரிமுதற் செந்தமிழ்த் தனிமுதன்மை அதன் பழமை கூறுமுகத்தாற் காட்டுகின்றார். பாலிமொழியுங் கீர்வாணமுந் தோற்றமுறுதற்கு மிகப்பழையகாலத்தே குமரி நாடு கடல்கொள்ளப்படுமுன் அந்நாட்டின்கண் ஓடிய பேரியாற் றருகின் மணிமலைச்சாரலிற் செங்கோன் என்னும் மன்னர் மன்னன் அவைக்களத்திலே தமிழ் மிகப்பயிலப்பட்ட திறம் எடுத்து விளக்கப்படுகின்றது.[1] இப்போது இந்துமகாசமுத்திரம் எனப் பெயர்பெறுகின்ற மாகடல் பல்லாயிர வருடங்களின்முன் குமரிநாடாயிருந்ததென்பது "வடிவே லெறிந்த வான்பகை பொறாது, பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக், குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள" என்று இளங்கோவடிகள் கூறு மாற்றானும்,[2] வேனிற்காதையில் "தொடியோள் பெளவம்" என்ப தற்கு அடியார்க்கு நல்லார் உரைக்குமுரையானும் இனிது விளங் கும். ஜர்மானியபண்டிதர் ஹெகில்[3] என்பவரும் குமரிநாடு முன்னிருந்த வுண்மையினை இனிது நிறுவினர் இவ்வரலாறெல் லாம் யாமீண்டு விரிப்பிற் பெருகும். 'ஞானபோதினி'ப் பத்திரத் தில் யாமெழுதிய சரித்திரவுரை[4]யிற் காண்க.

இனி "ஆழி யளவுசெய்த வாணையான்—பாழிப்

பெருந்தோள் வழுதி" என்றது வடிம்பலம்பநின்ற பாண் டியனைக் குறிப்பிட்டது இவன் வரலாறு புறநானூற் றுரை யினும் மதுரைக் காஞ்சியினுங் காண்க. அப்பாண்டியன் அமர்ந்த தென்மதுரைதான் கடல்கொள்ளப்பட்ட மதுரையென் பது. இப்போதுள்ள மதுரைநகரன்று. அத்தென்மதுரையிலே தான் அப்பாண்டியன் அவைக்களத்து முதற்சங்கம் நிலைபெறலா யிற்று. அச்சங்கத்து வீற்றிருந்தார் அகத்தியனார், முரஞ்சியூர் முடிநாகராயர்முதற் பலர். இதன் ஆக்கியோர் அவலோகித முனிவனும் அச்சங்கத்து வீற்றிருந்தான் எனக்கூறியது பௌத்த நூல் வழக்குப்பற்றி.[5] பின்னர்த் தென்மதுரை கடல்கொள்ளப்

---

1. இது 'செங்கோன்றரைச்செலவு' என்னும் மிகப் பழைய நூலிற் காண்க.

2. சிலப்பதிகாரம்.

3. Prof. Ernst Haeckel.

4. நக்கீரனார் தெய்வப்புலமைமாட்சி.

5. வீரசோழிய பாயிரச் செய்யுள்.

படுதலின், வடமதுரையின்கண் இடைச்சங்கமுங் கடைச்சங்கமும் நிலைபெற்றனவென்கின்றார்.

இனி 151-வது வரியிலிருந்து ஆராய்ச்சிவன்மையிலார் ஒரு சாரார் அறிவு மயங்கி வடமொழியிலிருந்து தமிழ் பிறந்த தெனக் கூறும் கையறியாப் போலிப்பொய்யுரையை மறுத்திடுகின்றார். தமிழ் திராவிடம் பாலி முதலியவற்றினின்றும் பிறந்து, தனக்கென ஓரெழுத்தின்றி வடநாட்டிற் பிராகிருதமொழி எழுத்தினையும், தென்னாட்டிற்றமிழ்க்கிரந்த வெழுத்தினையும் துணைகொண்டு நடைபெறும் சமக்கிருதம் தன்னை யீன்றாளைத் தன்மகளெனக்கூறி இழிவுரைப்பது பொருந்தாதென ஒருதாரணமுகத்தான் விளக்குகின்றார்.

இனி 169-வது வரிமுதல் செந்தமிழுக்கு இயற்கையிலேயுள்ள தெய்வச்சிறப்பினை எடுத்துரைத்துக்கொண்டுபோய்,

"—ஓவிலா
ஓராழிச் செங்கோ லுயர்வொப்பி லாவரசே
பேராழி போலும் பெரும்புகழாய்—ஓாமல்
உன்செயல்க ளெல்லாம் உரைக்கத் தலைப்பட்டால்
என்சிறுமைக் குள்ளே யியையுமோ."

எனத் தமிழ்மொழிப் பண்டைச் சிறப்பினையும், பிறமொழிக்கு அஃதாக்கம் பயந்தமையினையும் ஒருவாறு நன்கு தொகுத்து அறிவுறுத்தினார்.

இனி இப்பகுப்பின்கீழ் வருவனவெல்லாம் தமிழ்ப்பாஷையிலுள்ள நூற்பொருள்களை எடுத்துக்காட்டி அவற்றின் விரிவும் பயனும் இனிது விளக்கி மேம்படுத்தலின் அப்பகுதி கற்கும் மாணக்கர் தாமே யறியற்பாலனவாதல்பற்றி விடுக்கின்றாம். அது நிற்க.

இதன் ஆக்கியோர் தமக்கு நட்பின்கெழுதகைமையிழுக்கா நண்பர் பலரையும் இந்நூலின் இறுதிப்பாகத்திற் றொகுத்துக் கூறியுள்ளார். அவருள் எமக்காசிரியரான ஸ்ரீமது. வெ. நாராயண சுவாமிப் பிள்ளையவர்களின் குணமாட்சி வியந்து கூறிய பகுதி இன்றியமையாப் பொருட்பொலிவுடையதாகலின் அதனை யீண்டெடுத்துக் காட்டி இம்முகவுரையை முற்றுப் பெறுவிக்கின்றாம்.

"—முந்துவளச்
சிந்தாமணி யென்னும் யான்பிறந்த சீர்ப்பதியிற்
சிந்தா மணிபோலுஞ் சீர்ச்செல்வன்—நந்தாத
அங்கிலே யத்தலைவ ராடற் பெருஞ்சேனைத்
துங்கத் தலைமைத் துரைத்தனத்தான்—மங்காத்

**திருவேங்க டாசலமால்** செய்ததவம் மைந்தன்
உருவோடு வந்ததென உற்ருேன்—மருவுநட்பின்
என்னிளமை தொட்டின்றும் என்னுளத்து நீங்காது
மன்னுமுழுவ லன்பன் வளர்செல்வன்—சொன்ன
கலைவகைக ளென்னேடு கற்ற புலவன்
நிலைநற் குணமலைமேல் நிற்போன்—புலமைமிக்க
பொய்யா மொழியான் பொருவேன் நினக்கென்னப்
பொய்யா மொழியான் பொறைமிக்கான்—ஐயாமல்
**நாகையார்** பல்லோரை நற்புலவ ராக்குவித்த
நாகையாச் சொல்வளவன் நாகரிகன்—ஓகையாற்
பாரா யணவரிய பல்புகழான் நல்லவர்சொல்
**நாரா யணசாமி** நாவலவன்.”

சென்னைக்
கிறிஸ்டியன் காலேஜ்.
26—9—'05.

நாகபட்டினம்-வேதாசலம்பிள்ளை.

திருச்சிற்றம்பலம்.

---

## சிவபுராணத்தின் செம்மைப்பாடு

திரு அருட்பா (வடலூரடிகளார்) நூலுக்குச் சிறப்புப்பாயிர மளித்த ஒரு புலவர் வாக்கில் (2-ஆம் செய்யுள்.)

“மந்திரந் தந்திர வேத வாதமும்
ஐந்திர முந்தைநூல் யாவும் சார்வுற
எந்திறத் தெளிதினி லியைய வந்துன
முந்தையூ ழனு மலைவ**மோயப்** போந்தன.”
—அருட்பிரகாசனர் அமுதப் பாடல்கள்.

“மும்மைப் பெரு மலங்கள் **மோசித்து.**”
—கந்தர் கலிவெண்பா.

இவற்ருல் திருவாசகச் சிவபுராணத்தின்கண் காணப்படும் 20-ஆம் வரியினை “முந்தை வினைமுழுதும் **மோய** உரைப்பனியான்” யெனப் பாடங்கொள்வதே ஏற்புடைத்தாமென்க. இப் பாடத்திற்கு மோனைச் சிறப்பும் உள்ளது. “ஓய” என்னும் பாடம் இதனல் பொருட் சிறப்பு இன்று என்பதை உணர்க.

மூய்ந்தது—மோய்ந்துபோயிற்று என்னும் சேலம் மாவட்ட நாட்டு வழக்கும் இதனை வலியுறுத்தும்.

—சேலங்கிழான்.

---

# வானவர்

[வித்துவான், சு. குமாரசுவாமி ஆச்சாரி, M. A.,
விரிவுரையாளர் தமிழ்க்கல்லூரி, மயிலம்]

குட்டுவர், குடவர், பொறையர், உதியர், கோதை, வானவர் என்பன பண்டைத் தமிழகத்தின் மேற்பகுதியை ஆட்சிபுரிந்த சேரர் மரபினைக் குறிக்கின்ற பெயர்கள் ஆம். இவற்றுள் குட்டுவர் குட்ட நாட்டவர், குடவர் குடநாட்டவர், பொறையர் மலைப் பகுதியினர் என்பர். உதியர், கோதை என்னும் பெயர்களுக் குள்ள காரணம் புலப்படவில்லை. வானவாற்றினை (Honowar) வடக்கெல்லையாக உடைய நாட்டினர் வானவர் என்பர். இவ் யாறு வடகன்னடம் ஜில்லாவில் தென்பகுதியில் பாய்வது. இது வானியாறு எனவும்படும் வானியாறு பாயும் நாடு வானிவாசி (வானவாசி) நாடு எனப்பட்டது. இப்பொழுது கோவாவைச் சூழ்ந்துள்ள பகுதியாகும் அந்நாடு. ஈண்டு ஆற்றின்பெயர் நாட் டிற்காகியதா? நாட்டின்பெயர் ஆற்றிற்காகியதா? வானவன் நாடு என்பது வானநாடு என்றாகியதா? வானநாட்டவன் வானவன் எனப்பட்டானா? என்னும் இவ்வையங்கள் ஆய்வுக்குரியன

வானவர் என்னும் சொற்கு வேறு பொருள்கள் கூறுவதும் உண்டு. வானவர் எனத் தேவரைக் குறிப்பர். சேர நாட்டவர் தேவசம்பந்தம் உடையவராதலின் வானவர் எனப்பட்டனர் என்பர் சிலர். வானவர் என்னும் பெயர் சீனருக்கும் உண்டு. ஆதலின் சீனநாட்டிலிருந்து வந்தவர் வானவர் எனப்பட்டனர் என்பர். வானவன் என்னும் சொற்குக் கதிரவன் என்னும் பொருளும் உண்டு. ஆதலின் இவர்களும் சூரியமரபினராவரோ எனக் கருதவும் இடனுண்டு. வானம் நெருப்பு எனவும்படும். (அரும்பொருள் நிகண்டு) ஆதலின் சேரமன்னர் அக்கினி மரபினர் எனக் குறிக்கும் வழக்குண்மையும் சிந்திக்கத்தக்கது. தேவருலகம்போல இன்பம்செறிந்த நாடாக விளங்கியது ஆதலின் சேரநாட்டுக்கு வான நாடென்னும் பெயர் அமைய, அந்நாட்டவர் வானவர் எனக் குறிக்கப்பட்டனரோ எனக் கருதவும் அமையும். நம் தென்னாட்டுப் பகுதியில் மழை மிகுதியாகப் பெய்யுமிடம் மேற்குக் கடற்கரைப் பகுதியாதலின் எப்பொழுதும் மேகந் தவழும் சிகரங்களையுடைய மலைகள் நிறைந்த நாடாதலால் வான நாடு (வானம் - மழை, மேகம்) என நாட்டுக்குப் பெயர் அமைய அந் நாட்டவர் வானவர் எனப் பட்டனராதல் வேண்டும் என்பர் சிலர். சேரர் நாகமரபினராதலின் அம்மரபினருள் ஒரு பிரிவின ராகிய சுவர்க்கர் வானவர் எனப்பட்டனர் எனினும் பொருந்தும்.

வான் என்பது ஒரு மரவகை. வான்மரம் மிக்குள்ள பகுதியிலோடும் ஆறு அப்பெயரோடு வழங்கப் பின் நாட்டிற்கு வான நாடென்றும் ஆங்கு வாழ்பவர்க்கு வானவர் என்றும் வழங்கி யிருக்கலாம். வானீரம் என்பது வஞ்சிக்கொடியைக் குறிக்கும். சேரர் தலைநகராகிய வஞ்சி என்னும் பெயர்க்கு மணிமேகலை ஆசிரியர் சீத்தலைச் சாத்தனார் கூறும் காரணத்தை நினைப்பின், வஞ்சிக்கொடி நிறைந்துள்ள பகுதியில் பாயும் ஆறும் அக்கொடியின் பெயரால் வழங்கப்படலாமன்றோ? ஆதலின் நாட்டிற்கும் ஆங்கு வாழ்வார்க்கும் அதனடியாகப் பெயரமைதல் இயல்பெனக் கொள்ளவும் இடமுண்டு. வானி என்னும் ஆற்றினைக் கருதின் இக்காரணம் புலனும். வானி ஆன் பொருநை எனப் பிங்கலநிகண்டு கூறுகிறது. ஆதலின் எக் காரணம் வானவர் என்னும் மரபுப்பெயருக்குப் பொருந்தும் என்பதை அறிஞர்கள் ஆய்ந்து கூறுவார்களாக.

வானவன் என்பது ஒரு மன்னனது இயற்பெயரா? குடியின் பெயரா? என்பதும் ஆய்வுக்குரியது. சங்க இலக்கியங்களில் வானவன் என்னும் பெயரையுடைய சேரமன்னன் ஒருவன் காணப்படுகின்றான். கொல்லிக்குடவரை அவன் நாட்டது. (அகம் ௩௩, ௨௧௩) அவன் போரில் வேட்கையுடையவன்; பகைவரை வெல்லும் திறலுடையவன் (அகம் ௧௫௬, ௩௮௧, ௩0௯). அவனிடம் கப்பற்படையுமிருந்தது (புறம் ௧௨௬). புலவர், பாணர் முதலிய இரவலர் அவன்பால் தாம் விரும்பியதைப் பெறுவர் (அகம் ௩0௯) அவனது கொல்லி மலைச்சாரலில் எரி மருள் மாணிக்கக் கற்களின் ஒளி நிறைந்திருக்கும் (அகம் ௨௧௩). அவனது படைத்தலைவன் குதிரை மலைத்தலைவனும் ஈகையும் வீரமும் மிகுந்தவனுமாகிய பிட்டன் ஆவன் (அகம் ௭௭, ௧௪௩). அவனது சிறந்த செயல்கள் குடகடலில் நாவாய் ஓட்டியதும் இமயத்து வில் பொறித்ததுமாம் (புறம் ௩௩, ௧௨௬). இவனைப் பாடிய புலவர்கள் மாறோக்கத்து நப்பசலையார், ஆவூர்க்காவிதிகள் சாதேவனார், கருவூர்க் கதப்பிள்ளை சாத்தனார், தாயங்கண்ணனார், மதுரை அளக்கர் ஞாழலார் மகனார் மள்ளனார், மதுரை இளங் கௌசிகனார் ஆவர். இப்புலவர்களால் பாடப்பட்ட பிற மன்னர் கள் சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன், தலை யாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன், பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதிஆவர். இச்சம கால மன்னர்களைக்கொண்டு நோக்கின் வானவன் இமயவரம்ப னுக்குப் பிற்பட்டவனாதல் வேண்டும் என்பது தானே போதரும். ஆதலின் வானவன் என இலக்கியங்களில் வழங்கப்படுபவன் கடல் பிறக்கோட்டிய குட்டுவனா? பல்யானைச் செல்கெழு குட்டு வனா? இளஞ்சேர லிரும்பொறையின் தந்தையாகிய குட்டுவனா?

எனும் ஐயம் எழுதுகின்றது. (செந்தமிழ்ச் செல்வி-சிலம்பு உ௪-பரல் ௧௧-பக்கம் ௪அ௯-௪௯௫.)

கிள்ளிவளவன் காலத்துச் சேரமன்னன் கோதை என்பவன். அக்கோதையின் மறவன் பிட்டன் என வடம வண்ணக்கன் தாமோதரனார் குறிக்கின்றார். வானவன் மறவன் பிட்டன் என அகம் ௧௪௩-இல் ஆலம்பேரி சாத்தனார் கூறுகின்றார். பிட்டன் இவ்விரு சேரமன்னரது மறவன் என்பதை நோக்கின் வானவனும் கோதையும் ஒருவர்பின் ஒருவராக அரசெய்தியவராதல் வேண்டும். சேரமான் கோதை கடற்கடம் பெறிந்தவனென்றோ இமயவிற் பொறித்தவனென்றோ இலக்கியங்கள் குறிக்கவில்லை. ஆதலின் வானவனும் கோதையும் இருவேறு மன்னராவர். கோதை குட்டுவன் கோதை எனவும் வழங்கப்படுகிறான். குட்டுவன் கோதை என்பதைக் குட்டுவனாகிய கோதை எனவும் குட்டுவன் மகனாகிய கோதை எனவும் பொருள் கொள்ளலாம். ஆதலின் கோதை வானவனுக்குப் பிற்பட்டவன் என்பதும், வானவன் இமயவரம்பனுக்குப் பிற்பட்டவனாகிய கடலோட்டிய வேல்கெழு குட்டுவனாதல்வேண்டும் என்பதும் புலனாகின்றன. (செந்தமிழ் ௪௯-தொகுதி, பக்கம் ௧உ௧).

வானவன் என்னும் சொற்பொருளை வானயாற்றோடு (Honowar) பொருத்தும்போது பிறிதொரு சிந்தனையும் எழுகிறது. அவ்யாற்றுக்கண்மையிலுள்ள கிட்கிந்தையில் வாழ்ந்த வானரர் இச்சேர மரபினர்தாமோ? என்னும் ஐயமேயாம் அது. குரங்கர்கள் என்பார் திராவிட மரபினரென்பதனால் இவ்வையம் எழுகின்றது.

---

## நம்பினவர் கெடார்

[நாஞ்சில், கா கணபதி]

நம்பின பேர்க ளென்றும்
நன்மையே பெறுவர் திண்ணம்
அம்புவி வாழ்வு தன்னில்
அலைவுறு திருக்க எண்ணில்
அம்புலி தலையில் சூடி
அணிமன்றில் ஆடும் அண்ணல்
எம்பெரு மானை நெஞ்சே
ஏத்திநீ வாழ்வாய் நன்றே!

---

# செய்திகளும் குறிப்புக்களும்

### (க) ஆங்கிலத்தின் இன்றியமையாமை பற்றித் திரு. தேஷ்முக் கருத்து

"உலகில் மிகவும் முன்னேற்றமடைந்துள்ள மொழிகளில் ஒன்றாகிய ஆங்கில மொழியைத் தாராளமாகப் பயன்படுத்தாவிடில் நாட்டு மக்களின் அறிவு வளர்ச்சியடைய இயலாமற்போகும் தற்கால அறிவியல், தொழில் நுட்ப இலக்கியங்களில் 3-இல் 2 பங்கு ஆங்கிலத்தில்தான் எழுதப் பட்டுள்ளன." என்று கடந்த 26-3-'58-இல் புதுதில்லியில் பல்கலைக் கழகக் கொடைக் குழுவினரால் கூட்டப்பட்ட மொழிபற்றிய மாநாடொன்றில் அக் குழுவின் தலைவர் திரு. சி. டி. தேஷ்முக் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

**குறிப்பு:** விருப்பு, வெறுப்பு இன்றி நடுநின்று ஆராய்வார்க்கு திரு. தேஷ்முக் அவர்களின் கருத்து நன்கு விளங்கும். தற்கால உலகியலில் ஆங்கிலத்தின் துணையின்றி அறிவியல், கலையியல் சொற்களை அறிந்து பயன்பெறுவது இயலாத காரியம். எனவே, அரசியலார் திரு. தேஷ்முக் அவர்களின் கருத்துரைகளுக்கு ஆக்கமளிப்பார்களென்று நம்புகிறோம்.

### (உ) நாட்டு மொழிபற்றி வங்க முதலமைச்சர் கருத்து

"பல மொழிகள் காரணமாக நாட்டின் ஒற்றுமை கெடும் என்று நான் கருதவில்லை. உருஷியா, கானடா முதலிய நாடுகளில் பல மொழிகள் நாட்டு மொழியாக இருக்கின்றன. சுவிட்சர்லாந்தில் நூற்றுக்கு ஒரு விழுக்காடு உள்ள மக்களால் பேசப்படும் ரோமனுக் என்னும் மொழி நாட்டுப் பொதுமொழியாக வைக்கப்பட்டுள்ளது.

இந்தியாவில் ஆரிய, திராவிட, மங்கோலிய மொழிகள் அடிப் படையில் பலவித பண்பாடுகளை உடையன. இங்கு ஒரே மொழியை நாட்டு மொழியாக வைத்துக்கொள்வது இயலாத காரியம். இந்தியா போன்ற நாடுகளில் ஒன்றுக்கு மேற்பட்ட மொழிகளை நாட்டு மொழியாக வைத்துக்கொள்ளலாம்." என்று கடந்த திங்களில் வங்க சட்ட மன்றத் தில் பேசிய முதலமைச்சர் திரு. பி. சி. இராய் அவர்கள் குறிப் பிட்டுள்ளார்.

**குறிப்பு:** அமைச்சர் இராய் அவர்களின் இக் கருத்து அரியது; ஆயினும் தமிழகத்திற்கு இது மிகப் பழைய கருத்து. இதே கருத்தினைப் பல அறிஞர்கள் மொழிப் போராட்டக் காலங்களில் இங்குக் கூறியுள்ளார் கள். தமிழகத்தின் கருத்துக்கு மதிப்புத் தராவிடினும் மைய அரசியலார் வங்கம் காட்டும் வழிச்சென்றேனும் நாட்டுக்கு நலம் பயப்பார்களாக.

### (ட) அமைச்சர் நேருவுக்கு ஆச்சாரியார் மறுமொழி

"மொழி பற்றிய செய்தி ஒரு பெரிய செய்தியல்ல. அதனை ஒரு பெரிய பொருளாக்கி முதன்மை அமைச்சர் குழப்பத்தை விளைவிக்கிறார். வேறு பெரிய பொருள்களில் கருத்தைச் செலுத்தி இம்மொழி பற்றிய பேச்சை அவர் நிறுத்திவிட்டால் நானும் எனது இயக்கத்தை நிறுத்தி விடுவேன். நாட்டின் ஒற்றுமையைக் கருதியே நான் என் கருத்தைத் தெரிவிக்கிறேன். நான் ஒற்றுமைக்கு ஊறு விளைப்பவன் அல்லன்,

எனவே முதன்மை அமைச்சருக்கு எச்சரிக்கை விடுவது என் கடமை. மொழிபற்றிய செய்தியில் முதன்மை அமைச்சரின் போக்கு தன்னாட்சித் தன்மை உடையதாக இருக்கிறது. இது மக்களாட்சி வளர்வதற்கான அறிகுறியல்ல." என்று 26 3-'58-இல் சென்னை கத்தோலிக் சென்டரின் ஆதரவில் நடைபெற்ற கூட்டத்தில் திரு. இராசகோபாலாச்சாரியார் அவர்கள் பேசியுள்ளார்.

மேலும் அவர் பேசுகையில் "மைய அரசியலின் ஆட்சிமொழி ஆங்கிலமாக இருந்தாலும், இந்தியாக இருந்தாலும் அதனால் தமிழ் மொழிக்கு எவ்வகையிலும் ஊறு நேராது." என்றும் கூறினார்.

**குறிப்பு**: ஆச்சாரியார் அவர்கள் இந்திய முதலமைச்சர்க்கு மறுமொழி தந்திருப்பது பாராட்டத்தக்கதேயாயினும், மைய அரசியல் மொழி எதுவாயிருப்பினும் தமிழுக்குக் கேடுவராது என்பதுதான் புரியாத பொருள். இந்திய ஆட்சியின்கீழ்த் தமிழகம் இருந்து பொது மொழி இந்தியாகவும் இருக்குமானால் அதனால் நிச்சயமாகத் தமிழ் கெடும்; தமிழகத்தின் விடுதலை வாழ்வும் கெடும். எனவே ஆச்சாரியார் அவர்களின் நோக்கமெல்லாம் இந்தியாவின் ஒற்றுமையை முதன்மையாகக்கொண்டதாகவன்றித் தமிழ்மொழியின் உயர்வு, தமிழகத்தின் விடுதலை வாழ்வு ஆகியவற்றை முதன்மையாகக் கொண்டதாகத் தெரியவில்லை.

### (ச) பழந்தமிழ்ச் சுவடி

எட்டயபுரத்தில் பல ஆண்டுகளாகப் பேணுதலின்றிக் கிடந்தது திருநாவுக்கரசு நாயனார் திருமடம். அண்மையில் சைவவேளாளச் சிறப்பினர் சிலர் முன்வந்து அம் மடத்தைப்பழுது பார்த்துச் சீர்மையுறச் செய்ய முன்வந்தனர் அங்கு ஏராளமான தமிழ் ஏட்டுச் சுவடிகள் காணப் பட்டனவாகத் தெரிகின்றது. அவற்றுள் தொல்காப்பியம், திருக்குறள், பாரதம், சூளாமணி, திருவிளையாடற்புராணம், சிந்தாமணி முதலியன சிறப்பாகக் குறிக்கப்பெறுவன. இச் சுவடிகள் இருநூறு ஆண்டுகளுக்கு முன்னதெனவும் தெரிகிறது.

### (ரு) மலையாளக் கவிஞர் வள்ளத்தோல் மறைவு

இப் பெரும்புலவர் வள்ளத்தோல் நாராயணமேனன் என வழங்கப் பெறுவர். இவர் 13-3-'58 இரவு 10 மணிக்கு இறையடிசேர்ந்தார். இவர் அரசவைப் புலவர். 1954-இல் இந்திய மக்களாட்சித் தலைவரால் 'பதுமவிபூசணம்' என்னும் பட்டம்பெற்றனர். அகவை 79. இவர்க்கு ஆண்மக்கள் ஐவரும், பெண்மக்கள் மூவரும் உளர். தம் அகவை பன்னிரண்டிலேயே காப்பியம் இயற்றினரென்ப. இராமாயணம், இருக்கு வேதம் முதலியவற்றை மொழிபெயர்த்ததாகவும் தெரிகிறது.

### (சு) 169-ஆம் அகவையின் மாண்ட முதியோர்

போகோடா (கொலம்பியா) இவர் பெயர் சாவியர் பெரைரா என்ப. இவர் மாண்டீரியாவிலுள்ள கிழவர் விடுதியின் வாழ்வினர். இவர் 1789-ஆம் ஆண்டில் பிறந்தவர். 1819-இல் கொலம்பியா உரிமைப் போரில் போராடியவர். பிரஞ்சுப் புரட்சியைப் பார்த்ததாகவும் தெரிகிறது. இவர் பல ஆண்டுகளுக்குமுன் யு. எஃச். ஏ சென்ற காலத்து அங்குள்ள மருத்துவ முதன்மையர் பலர் இவரை ஆராய்ந்து 150 அகவைக்கு மேலிருக்கலாமெனக் கூறினராம்.

(எ) அடுக்குமொழி ஆவுடையப்பச் செட்டியார் மறைவு

இவர் திருநெல்வேலி மாவட்டம் காருகுறிச்சியைச் சேர்ந்த சைவ வேளாண் செட்டிமரபினர். இயலிசைப்புலமை வாய்ந்தவர். சிவத் தொண்டர். சைவத்தைச் சொற்பொழிவு வாயிலாகவும், கதை இசை வாயிலாகவும் எங்கும் பரப்பிய சான்றோர். 8-4-'58 இல் இறைவன் திருவடி எய்தினர். அவர்தம் ஆருயிர் பேரின்புறுமாக. குடும்பத்தார்க்கு எங்கள் பரிவும் ஆறுதலும் உரியவாகுக.

---

# மதிப்புரை

"தமிழ் இலக்கிய வரலாறு தொல்காப்பியம்"

[ஆக்கியோர்: வித்துவான் க. வெள்ளைவாரணன், விரிவுரையாளர், தமிழாராய்ச்சித்துறை, அண்ணாமலைப் பல்கலைக்கழகம். விலை ரூபா. 5-38.]

இந்நூல் அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடாகும். இது தமிழின் தொன்மை முதனூலாகத் திகழும் "தொல்காப்பியத்தின்" தூய்மைச் சிறப்புணர்த்தும் வாய்மை நூலாகும். இத் தொல்காப்பியம் தலைச் சங்கத்திறுதியிலும் இடைச் சங்கத்துத் துவக்கத்திலும் வீற்றிருந்த ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியனாரென்னும் தனித் தமிழ் முனிவரனாரால் யாத்தருளப்பெற்றது. இவ்வருநூல் ஏனைய மொழிகளில் காணப்படும் மொழிஇலக்கணம் போன்றுமட்டும் அமையாது தமிழக அமைவு, மக்கட்பண்பு, ஒழுகலாறு, ஆட்சிமுறை, உழைப்பு ஊண் ஒற்றுமை அன்பின்பு முதலிய வாழ்க்கைச் சிறப்பு, தெய்வங்கொள்கை, தெய்வவழிபாடு, உலகுண்மை, பல்லுயிருண்மை, விழுமிய முழுமுதலாம் ஒரு கடவுளுண்மை, செல்வநிலையாமை, இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை, உலக நிலையாமை, அருள்நிலையொழுக்கம், சிறந்தது பயிற்றல் முதலிய உய்வுத்துறைகளும், இசை முறையும், நாடகமுறையும், திருமணமுறையும், பிறவும் சிறப்புற அமைந்த பொருள் பகுதியுங்கொண்ட தனித்தமிழ் மறை நூலாகும். இந்நூல் பொதுவாக உலகத்தார்க்கு உறுதிபயக்கும் ஒப்புயர்வில்லா நூலாகவும், சிறப்பாகத் தமிழக மாந்தர்க்கு உய்வினைப் பயக்கும் ஒரு தனிக் கருவூலமாகவும் திகழ்கின்றது.

இதன் இலக்கியமாகத் திகழ்வது செந்தமிழ்ப் பொதுமறையாம் திருவள்ளுவநாயனார் அருளிச்செய்த திருக்குறளாகும். இவ்விரண்டும் முறையே உடலுயிர்போன்றன. இவ்விருபெரு நூற்களானுணர்த்தப் படும் மெய்ப்பொருட் கொள்கைகளே தொன்மைத் தமிழக மாந்தரின் நன்மைச் சமயமாகும். தனித் தமிழரின் மெய்ந்நெறிக்கோள் "முப்பொருளுண்மை, அப்பொருள் வண்ணமும் இயைபும், செப்பரும் சார்பும், ஒப்பரும் இன்பமும்" தப்பின்றித்தேறிக் கடைப்பிடித்தொழுகுவதாகும். அதனை இவ்வாசிரியர் அகப்புறச் சான்றுகளுடன் ஐயமகற்றித் துணிபுற நாட்டியுள்ளார்.

தொல்காப்பிய முனிவரனாரின் காலமும் சமயமும் ஞாலமயங்கச் சாலப் பிழைபாடுடன் இதன்முன் பல காலங்களில் பலராலும் ஏதொரு

வலிய சான்றுமின்றித் தத்தம் மனம்போனவாறு விரைந்து வரைந்து வெளிப்படுத்தப்பட்டுள்ளன. அவையனைத்திற்கும் நடுநிலை பிறழாது ஆசிரியர் மறைமலையடிகளார் முதலியோரால் அவ்வப்போது ஏதுவின் முடித்துக்காட்டி வலிய சான்றுகளுடன் மறுப்புக்கள் வெளிப்போந் துள்ளன. எனினும், இந்நூல்போன்று அவையெல்லாம் பல்கலைக் கழக வெளியீடன்று. உண்மை தேற்றும் ஒப்பில் இந்நூல் எல்லாரும் போற்றும் சொல்லரும் பல்கலைக் கழக வெளியீடாக அமைந்துள்ளது. மேலும் முறைமன்ற நடுவர் நிறைமொழிபோன்று அறுதியிட்டு உறுதி யுரைக்கும் ஆராய்ச்சித்துறைச் சார்பாகப் போந்த தனி மாண்பும் இனி துறப் பொருந்தியது. எனவே இஃது எத்திறத்தார் ஐயத்தையும், மயலையும், தடுமாற்றப்பிறழ்ச்சியையும் முற்ற அகற்றி உண்மை காட்டும் ஒண்மையுடைத் தென்பதுறுதி.

இதன் ஆசிரியரவர்கள் அறிஞர் எம். சீனிவாசையங்கார் அவர்கள் முதல் அறிஞர் எஸ். வையாபுரிப் பிள்ளையவர்கள் ஈறாகவுள்ள பல்லோர் மறுத்துவரைந்த மறுப்புகளையெல்லாம் அறந்திறம்பாமுறையால் நேர்மை யுடன் நிரலே மறுத்துள்ளார்கள். அதன் சிறப்பெல்லாம் உண்மை காணும் வேட்கைசேர் ஆய்வாளர் நூலுட்காண்பாராக. தொல்காப்பிய முனிவரனாரின் காலம் நூலுள் (105) மேனாட்டாசிரியர் கீழ்நாட்டாசிரியர் ஆகிய தோலாநாவின் மேலோர் நடுநின்றாய்ந்து கண்ட நன்முடிபுகளை எடுத்துக்காட்டி மேலெல்லை கி. மு. (5320) ஐயாயிரத்து முந்நூற்றிருபது என நாட்டியுள்ளார்கள். இம்முடிபினை உண்மை ஆய்வாளர்களனைவர் களும் ஒரு மனமாக ஏற்பரென்றே நம்புகின்றோம்.

இந்நூல் இரு பகுதிகளாக அமைந்துள்ளது. முதற்பகுதிக்கண் "தொல்காப்பியம் என்பது முதல் தொல்காப்பியனார் சமயம் என்பதீறாக இருபத்தைந்து தலைப்புகளும், இரண்டாம் பகுதியில் தொல்காப்பியம் நுதலிய பொருள், எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் என மூப்பெரும் பிரிவுகளுள், ஒவ்வொன்றற்குமுரிய ஒன்பதொான் பதியல்களுமாகிய இருபத்தேழு இயல்களும் அமைந்துள்ளன. எல்லாம் செவ்வையாக ஆய்ந்து நன்முறையில் விளக்கமும் தரப்பட்டுள்ளன. முச்சங்க வரலாறுகள், சங்க நூற்களின் மாண்புகள், உரையாசிரியர் களின் உரை விளக்கங்கள், உரையாலும் தெளியமுடியாத நுண்பொருட் டெளிவுகள், நூற்பாக்களின் உண்மை வடிவங்கள் எல்லாம ஒண்மையுற எண்மையாகத் தரப்பட்டுள்ளன.

இதனை ஆசிரியர், மாணவர், ஆய்வாளர், அமிழ்தினுமினிய தமிழ் மொழி பேணும் அறிஞர்கள், இருபெருந்திருவினர் யாவரும் வாங்கிக் கற்றும் கற்பித்தும் இன்புறுவாராக. தமிழக இல்லங்களையும், நூலகங் களையும், படிப்பகங்களையும், கல்லூரிகளையும், பொதுநிலையங்களையும், திருமடங்களையும், திருக்கோவில்களையும் அணிசெய்யும் சிறப்புகள் பலவற்றுள்ளும் இது தனிச் சிறப்பும் முதன்மையும் வாய்ந்ததொன்றாம் என நம்புகின்றோம்.

---

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே, அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர் : வ. சுப்பையா,

